


தமிழ்நாடு அரசு

# கணக்கு

## மூன்றாம் வகுப்பு

தீண்டாமை
மனிதநேயமற்ற செயல் – பெருங்குற்றம்

பள்ளிக் கல்வித்துறை


தமிழ்நாடு அரசு
இலவசப் பாடநூல் வழங்கும்
திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்டது
(விற்பனைக்கு அன்று)

முதல் பதிப்பு – 2011
(சமச்சீர்க்கல்வி – பொதுப் பாடத்திட்டத்தின் கீழ் வெளியிடப்பட்ட நூல்)

**பாடநூல் குழுத்தலைவர்**

**சி. பெரியசாமி,**
முதுநிலை விரிவுரையாளர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
நாமக்கல் – 637 001.

**மேலாய்வாளர்கள்**

**கோ. பழனி,**
விரிவுரையாளர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
வடலூர் – 607 303, கடலூர் மாவட்டம்.

**க. மங்கையர்க்கரசி,**
விரிவுரையாளர்,
மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்,
தருமபுரி – 636 808.

**நூலாசிரியர்கள்**

**எஸ். சௌந்தரராஜன்,**
தலைமை ஆசிரியர்,
ஊ. ஒ. நடுநிலைப் பள்ளி,
அகணி, சீர்காழி – 609 111.
நாகப்பட்டினம் மாவட்டம்.

**இ. மலர்விழி,**
இடைநிலை உதவி ஆசிரியை,
ஊ. ஒ. நடுநிலைப்பள்ளி
நின்னைகாரை, காட்டாங்கொளத்தூர் ஒன்றியம்,
காஞ்சிபுரம் மாவட்டம்.

**பாலின் காட்பிரே அஜீ,**
பட்டதாரி ஆசிரியை,
டவுட்டன் பெண்கள் மேல்நிலைப் பள்ளி,
வேப்பேரி, சென்னை – 7

**சு. பாலாம்பாள்,**
ஆசிரியை,
ஜெ.ஜி. ஹிந்து வித்யாலயா மெட்ரிகுலேஷன் பள்ளி,
மேற்கு மாம்பலம், சென்னை – 600 033.

**சு. மீனாட்சி,**
ஆசிரியை,
ஜி.கெ. ஷெட்டி ஹிந்து வித்யாலயா மெட்ரிக் மேல் நிலைப் பள்ளி,
ஆதம்பாக்கம், சென்னை – 600008.

**வடிவமைப்பு மற்றும் அட்டை வடிவமைப்பு**

வி. ஜேம்ஸ் ஆப்ரகாம் & ரா. ராஜா
சென்னை – 600 002.

நூல் அச்சாக்கம்
தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்
கல்லூரிச் சாலை, சென்னை – 600 006.

விலை : ரூ.

இந்நூல் 80 ஜி. எஸ். எம் மேப்லித்தோ தாளில் அச்சிடப்பட்டுள்ளது.

ஆப்செட் முறையில் அச்சிட்டோர் :

| வ.எண் | பொருளடக்கம் | பக்கம் |
|---|---|---|

# 1 வடிவங்களும் உருவங்களும் - I

## நினைவுகூர்வோம்



நம்மைச் சுற்றி ஏராளமான உருவங்கள் காணப்படுகின்றன.



முக்கோணம்

சதுரம்





செவ்வகம்

வட்டம்

என்பன நான்கு அடிப்படை வடிவங்கள் ஆகும்.











## அடிப்படை வடிவங்கள்

வடிவங்கள் என்பது
சமதள உருவங்கள் ஆகும்.



கீழ்க்காணும் அடிப்படை வடிவங்களைக் கவனி.



சதுரம்



செவ்வகம்



முக்கோணம்



வட்டம்



## சதுரம் :



இது ஒரு சதுரம்.
இதற்கு நான்கு பக்கங்களும்
நான்கு முனைப்புள்ளிகளும் உண்டு.





### செயல்பாடு 1

தாள் மடித்தல் மூலம் சதுரத்தை உருவாக்குவோம்.

படி 1 : ஒரு தாளை எடுத்து அதைப் படத்தில் காட்டியுள்ளபடி மடிக்கவும்.



படி 2 : நிழலிட்ட பகுதியை வெட்டி நீக்கி விடவும்.



படி 3 : தற்போது மடிப்பைப் பிரிக்க, சதுரம் கிடைக்கும்.



சதுரத்தின் எதிரெதிர் முனைப்புள்ளிகளை இணைத்தால் கிடைக்கும் நேர்க்கோடு சதுரத்தின் மூலைவிட்டம் ஆகும். சதுரத்திற்கு இரண்டு மூலைவிட்டங்கள் உண்டு.

படத்தில் காட்டியுள்ளபடி சதுரத்தின் பக்கங்களை ஒப்பிட ஒன்றுடன் ஒன்று பொருத்திப் பார்.






மூலைவிட்டங்களை நூலினால் அளந்து பார்

**மூலைவிட்டங்கள் சமம்**



### செயல்பாடு 2

சதுர வடிவில் உள்ள பொருள்களைப் பட்டியலிடுக.

| | | | |
|---|---|---|---|
| சதுரங்க அட்டை |  |  |  |

**செவ்வகம் :**






இதற்கு நான்கு பக்கங்களும் நான்கு முனைப்புள்ளிகளும் உண்டு. தாள் மடித்தல் மூலம் செவ்வகத்தின் எதிரெதிர் பக்கங்களை ஒன்றுடன் ஒன்றைப் பொருத்தி ஒப்பிட்டுப் பார்!

  

என்ன காண்கிறாய் **?** எதிரெதிர் பக்கங்கள் சரியாகப் பொருந்துகிறது.



செவ்வகத்தின்
எதிரெதிர் பக்கங்கள்
சமம்.

சதுரத்தில் செய்தது போலவே செவ்வகத்திலும் மூலைவிட்டங்களை வரைக. நூலினைப் பயன்படுத்தி மூலைவிட்டங்களை அளக்க.



**செவ்வகத்திலும்
மூலைவிட்டங்கள் சமம்.**





**செயல்பாடு 3** செவ்வக வடிவில் உள்ள பொருள்களைப் பட்டியலிடுக.

| | | | |
|---|---|---|---|
| போர்வை | | | |



## முக்கோணம் :



இது ஒரு முக்கோணம்.



தாள் மடிப்பின் மூலம் நாம் முக்கோணத்தை உருவாக்குவோம். ஒரு தாளை எடுக்க. அதை மூலைவிட்டம் வழியே வெட்டுக. தற்போது இரண்டு முக்கோணங்கள் கிடைக்கின்றன.







முக்கோணத்திற்கு மூன்று பக்கங்கள் உள்ளன.




முக்கோணத்திற்கு மூன்று முனைப்புள்ளிகள் உள்ளன.






**செயல்பாடு 4** முக்கோண வடிவில் உள்ள பொருள்களைப் பட்டியலிடுக.

| | | | |
|---|---|---|---|
| விக்ஸ் மிட்டாய் | | | |

## வட்டம் :

வட்டம் என்பது ஒரே சீரான வளைகோட்டினால் ஆன மூடிய வடிவம் ஆகும்.
இதற்கு முனைப் புள்ளிகள் கிடையாது.



இது ஒரு வட்டம்.






**பென்சிலையும் நூலையும் பயன்படுத்தி ஒரு வட்டம் வரைவோம்.**

படத்தில் காட்டியுள்ளபடி ஒரு நூலைப் பென்சிலில் கட்டுக.



நூலின் ஒரு முனையை ஒரு தாளின் மீது வைத்து நிலையாகப் பிடித்துக் கொள்க. நூலின் மறுமுனையில் உள்ள பென்சிலைக் கொண்டு, தாளில் ஒரு மூடிய வளைகோடு வரைய, கிடைக்கும் வடிவம் வட்டம் ஆகும்.








**செயல்பாடு 5** வட்ட வடிவில் உள்ள பொருள்களைப் பட்டியலிடுக.

| | | | |
|---|---|---|---|
| குறுந்தகடு | | | |



## வளைகோடு மற்றும் நேர்க்கோடு








புள்ளிகளைக் கொண்டு வளைகோடு மற்றும் நேர்க்கோட்டை வரையலாம். கீழ்க்காணும் படங்களைக் கவனி.



**இவைகளை நாம் கோலங்கள் என்கிறோம்.**



## பயிற்சி 1

கீழே கொடுக்கப்பட்ட அடிப்படை வடிவங்களுக்கு முனைப்புள்ளிகள் எத்தனை ? பக்கங்கள் எத்தனை ? என எண்ணிக் கட்டத்தில் நிரப்புக.






| முனைப் புள்ளிகள் | முனைப் புள்ளிகள் | முனைப் புள்ளிகள் | முனைப் புள்ளிகள் |
|---|---|---|---|
| பக்கங்கள் | பக்கங்கள் | பக்கங்கள் | பக்கங்கள் |



## செயல்பாடு 6

ஒரு சதுர வடிவத் தாளை எடுத்து படத்தில் காட்டியுள்ளபடி முனைகளை மடிக்க. எத்தனை முனைப்புள்ளிகள் உள்ளன ? என எண்ணி எழுதுக.






| முனைப் புள்ளிகள் | முனைப் புள்ளிகள் | முனைப் புள்ளிகள் | முனைப் புள்ளிகள் |
|---|---|---|---|
| பக்கங்கள் | பக்கங்கள் | பக்கங்கள் | பக்கங்கள் |



## முயன்று பார் !



நான்கு முனைப்புள்ளிகள் மட்டும் அமையும் படி, ஒரு சதுர வடிவத் தாளின் அனைத்து முனைகளையும் மடித்துப் பார்.



## செயல்பாடு 7

வளைகோடுகளை பச்சை வண்ணம் கொண்டும், நேர்க்கோடுகளை சிவப்பு வண்ணம் கொண்டும் வரைந்து படங்களை முழுமைப்படுத்துக.




















## டேன்கிராம்

'டேன்கிராம்' என்பது பழங்காலத்திய சீனப்புதிர் ஆகும். டேன்கிராமில் உள்ள துண்டுகளைக் கொண்டு விலங்குகள், மனிதர்கள் போன்ற பலவிதமான மாதிரிகளை உருவாக்கலாம்.

5 துண்டுகள் டேன்கிராம்






## செயல்பாடு 8

5 துண்டுகளைக் கொண்ட டேன்கிராம் தயார் செய்க. அவற்றில் பொருத்தமான துண்டுகளைக் கொண்டு கீழ்க்காணும் வடிவங்களை உருவாக்குக.














## செயல் திட்டம்




ஏழு துண்டுகள் டேன்கிராம் ஒன்றினை உருவாக்கி பின்வரும் வடிவங்களை செய்து பார்.

i) ஐந்து முக்கோணங்களையும் பயன்படுத்தி செய்க.



ii) 1, 2, 3 மற்றும் 5 துண்டுகளைப் பயன்படுத்துக.



iii) இரண்டு முக்கோணங்களை மட்டும் பயன்படுத்துக.



iv) 1, 2, 3, 4 மற்றும் 5 துண்டுகளைப் பயன்படுத்துக.





## முயன்று பார் !



## தளநிரப்பிகள்

கீழே உள்ள படங்களைப் பார்த்து கலந்துரையாடுக :






வடிவங்கள் இடைவெளி இல்லாமலும் ஒன்றின் மேல் ஒன்று படியாமலும் ஒரு தளத்தினை நிரப்பும் போது தளநிரப்பிகள் கிடைக்கின்றன.

### எடுத்துக்காட்டு

தளநிரப்பிகளுக்கான எடுத்துக்காட்டுகள் :







### செயல்பாடு 9

கீழே உள்ள வடிவங்களைக் கொண்டு புதிய தள நிரப்பிகளை உருவாக்குக:







ஒரே வடிவத்தினை மீண்டும் மீண்டும் பயன்படுத்தி ஒரு தளத்தினை இடைவெளி இன்றியும், ஒன்றின் மேல் ஒன்று படியாமலும் நிரப்பும் போது தள நிரப்பி வடிவம் கிடைக்கிறது.

ஒழுங்கு பலகோணங்களில் முக்கோணம், சதுரம், அறுங்கோணம் போன்றவை ஒரு தளத்தினை நிரப்பும் வடிவங்களாகும்.

எடுத்துக்காட்டுகள்:




பின்வரும் படங்களை உற்று நோக்குக :




ஐங்கோணம், எழுகோணம் போன்றவை ஒழுங்கு பலகோணமாக இருப்பினும் அவைகள் தள நிரப்பி வடிவங்களாகாது.




உன்னைச் சுற்றியுள்ள தள நிரப்பி வடிவங்களை உற்றுநோக்கி கலந்துரையாடுக.



# 2 வடிவங்களும் உருவங்களும் - II

## வரைபடம்

ஒரு இடத்தின் அமைவிடத்தை சில அடையாளங்கள் கொண்டு தெளிவாக அறிய உதவுவது வரைபடம் ஆகும்.




மேலே உள்ள படத்தை உற்று நோக்கி புறவெளி இருத்தலின் தொடர்புகளான அருகாமையில், பக்கத்தில், அடுத்தடுத்து, முன்னால், பின்னால், இடையில், வெகு தொலைவில், மேலே, கீழே ......... போன்றவைகளைப் பற்றி கலந்துரையாடுக.

## பயிற்சி 1

1. பள்ளி _______________ அடுத்துள்ளது. ( உணவகத்திற்கு / வங்கிக்கு )

2. _______________ மருத்துவமனைக்கு முன்னால் உள்ளது. ( பூங்கா / கோட்டை )

3. _______________ அஞ்சலகத்தில் இருந்து வெகு தொலைவில் உள்ளது. ( விளையாட்டரங்கம் / மலை )



4. விளையாட்டரங்கம் பள்ளிக்கு ____________ உள்ளது. ( அடுத்து / பின்னால் )

5. பூங்கா அஞ்சலகத்திற்கும் வங்கிக்கும் ____________________ உள்ளது.

( இடையில் / முன்னால் )

6. நீதிமன்றமும் மருத்துவமனையும் _____________________ உள்ளன.

( பின்னால் / அடுத்தடுத்து )

7. கொடிக் கம்பம் பள்ளிக்கு ___________ அமைந்துள்ளது. ( முன்பு / பின்னால் )

8. பூங்காவிற்கு முன்னால் ____________ உள்ளது. ( ஆறு / விளையாட்டரங்கம் )

9. அஞ்சலகம் ____________ ஆல் சூழப்பட்டுள்ளது. ( மலைகளால் / மரங்களால் )

10. விளையாட்டரங்கம் வரைபடத்தின் _________________ அமைந்துள்ளது.

( மேலே / கீழே )

ஓர் இடம் எங்கே இருக்கிறது என்பதை வரைபடத்தினைக் கொண்டு நாம் எளிதில் அறியலாம்.



படத்தில் உள்ள மனிதர்கள், பொருள்கள் மற்றும் இடங்களுக்குகிடையே உள்ள புறவெளி இருத்தலின் தொடர்புகளான – கீழே, மேலே, மீது, உள்ளே, இடையே........ போன்ற வார்த்தைகளைப் பயன்படுத்திக் கலந்துரையாடுக.





செயல் திட்டம்

உனது வீடு மற்றும் பள்ளியின் வரைபடத்தை வரைந்துபார்.

## கன உருவங்கள்





கன உருவங்களுக்கு நீளம், அகலம் மற்றும் உயரம் உண்டு.

இவைகள் முப்பரிமாண உருவங்கள் என்றும் அழைக்கப்படும்.





### செயல்பாடு 1

புள்ளித்தாளில் நேர்க்கோடுகளையும் மற்றும் வளைகோடுகளையும் பயன்படுத்தி கன உருவங்களை வரைந்து பார்.








## செயல்பாடு 2

கன உருவங்களை முழுமையாக்கி வண்ணமிடுக :







## பயிற்சி 2

கீழ்க்காணும் கன உருவங்களைப் பெயருடன் பொருத்துக :



# 3 எண்கள்

## நினைவுகூர்வோம்



அ) படத்தைப் பார்த்து விடையளிக்க :

1. பசுக்களின் எண்ணிக்கை.
2. பூனைகளின் எண்ணிக்கை.
3. மரங்களின் எண்ணிக்கை.
4. முட்டைகளின் எண்ணிக்கை.
5. பறவைகளின் எண்ணிக்கை.
6. வாத்துகளின் எண்ணிக்கை.
7. நாய்களின் எண்ணிக்கை.
8. பூக்களின் எண்ணிக்கை.



ஆ) வட்டமிடப்பட்ட இலக்கத்தின் இடமதிப்பை கட்டங்களில் எழுதுக :

1) 5 (4) [4 ஒன்றுகள்]　　2) (7) 1 [ ]

3) (6) 3 [ ]　　4) 9 (8) [ ]

இ) மணிகள் குறிக்கும் எண்களை அதற்குரிய கட்டங்களில் எழுதுக :

1)   = 24

2)   = [ ]

3)   = [ ]

ஈ) விடுபட்ட எண்களை எழுதுக :

1) 


2) 


3) 


4) 


 முயன்று பார் !

என்னுடன் 1 ஐக் கூட்டினால் நான் 100 -ல்
ஒன்றைக் கழிக்கும் மதிப்பிற்கு சமமாவேன்.
நான் யார் தெரியுமா ?



## எண்ணுரு, எண் பெயர் அறிவோம் (1000 வரை)

0, 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9 என்பன ஓரிலக்க எண்கள் .

10 முதல் 99 முடிய உள்ள எண்கள் ஈரிலக்க எண்கள்.

ஈரிலக்க எண்களில் மிகப் பெரிய எண் 99 ஆகும்.




| பத்துகள் | ஒன்றுகள் |
|---|---|
| 9 | 9 |

99 மணிகளுடன் 1 மணியைச் சேர்த்தால் நமக்குக் கிடைப்பது நூறு மணிகள் ஆகும்.

 +  = 

9 பத்துகள் + 1 பத்து = 1 நூறு

100 என்ற எண்ணை ஆணிமணிச் சட்டத்தில் அமைப்போம்.




| நூறுகள் | பத்துகள் | ஒன்றுகள் |
|---|---|---|
| 1 | 0 | 0 |



## நூறு நூறாக எண்ணுவோம்

**200** முதல் **1000** முடிய எண்ணுரு, இடமதிப்பு, எண்பெயர் அறிதல்

| இடமதிப்பு | | | எண்பெயர் |
|---|---|---|---|
| நூ | ப | ஒ | |
| 2 | 0 | 0 | இருநூறு |
| 3 | 0 | 0 | முந்நூறு |
| 4 | 0 | 0 | நானூறு |
| 5 | 0 | 0 | ஐநூறு |
| 6 | 0 | 0 | அறுநூறு |






| நூ | ப | ஒ |
|---|---|---|
| 7 | 0 | 0 |

எழுநூறு






| நூ | ப | ஒ |
|---|---|---|
| 8 | 0 | 0 |

எண்ணூறு






| நூ | ப | ஒ |
|---|---|---|
| 9 | 0 | 0 |

ஒன்பது நூறு

ஒன்பது நூறு என்பதை
தொள்ளாயிரம் என்போம்.








| ஆ | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| 1 | 0 | 0 | 0 |

பத்து நூறுகள் என்பதை ஆயிரம் என்போம்.

நூறுகளின் இடத்திற்குப் பிறகு ஆயிரங்களின் இடம் அமைவதைக் கவனி.





## நினைவிற்கு

  

10 ஒன்றுகள் என்பது 1 பத்து

  

10 பத்துகள் என்பது 1 நூறு

  

10 நூறுகள் என்பது 1 ஆயிரம்

10 ஒன்றுகள் = 1 பத்து

10 பத்துகள் = 1 நூறு

10 நூறுகள் = 1 ஆயிரம்

## 101 முதல் 110 முடிய எண்களை அறிதல்

| இடமதிப்பு | | | எண்பெயர் |
|---|---|---|---|
| நூ | ப | ஒ | |
| 1 | 0 | 1 | நூற்று ஒன்று |
| 1 | 0 | 2 | நூற்று இரண்டு |
| 1 | 0 | 3 | நூற்று மூன்று |
| 1 | 0 | 4 | நூற்று நான்கு |
| 1 | 0 | 5 | நூற்று ஐந்து |
| 1 | 0 | 6 | நூற்று ஆறு |



| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 0 | 7 |

நூற்று ஏழு

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 0 | 8 |

நூற்று எட்டு

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 0 | 9 |

நூற்று ஒன்பது

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 1 | 0 |

நூற்றுப் பத்து

## ஆசிரியருக்கு

ஆணி மணிச்சட்டம் மற்றும் மணிகளைப் பயன்படுத்தி **111** முதல் **1000** முடிய கற்பிக்கவும்.



மாணவர்களுக்கு 101 முதல் 1000 முடிய அடுத்த பக்கத்தில் உள்ளது போல் பயிற்சியளிக்கவும்.

**படித்துப்பழகு : 101 முதல் 200 முடிய.**

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 101 | 111 | 121 | 131 | 141 | 151 | 161 | 171 | 181 | 191 |
| 102 | 112 | 122 | 132 | 142 | 152 | 162 | 172 | 182 | 192 |
| 103 | 113 | 123 | 133 | 143 | 153 | 163 | 173 | 183 | 193 |
| 104 | 114 | 124 | 134 | 144 | 154 | 164 | 174 | 184 | 194 |
| 105 | 115 | 125 | 135 | 145 | 155 | 165 | 175 | 185 | 195 |
| 106 | 116 | 126 | 136 | 146 | 156 | 166 | 176 | 186 | 196 |
| 107 | 117 | 127 | 137 | 147 | 157 | 167 | 177 | 187 | 197 |
| 108 | 118 | 128 | 138 | 148 | 158 | 168 | 178 | 188 | 198 |
| 109 | 119 | 129 | 139 | 149 | 159 | 169 | 179 | 189 | 199 |
| 110 | 120 | 130 | 140 | 150 | 160 | 170 | 180 | 190 | 200 |

விடுபட்ட எண்களை எழுதுக.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 201 | 211 | | | | | | 271 | | |
| 202 | | | | | | | | | |
| | | | | | 253 | | | | |
| | | | | | | | | | |
| | | | 235 | | | | | | |
| | | | | | | | | | |
| | | | | 247 | | | | | |
| | | | | | | | | | |
| | | | | | | 269 | | | |
| 210 | | 230 | | | | | | 290 | 300 |



## எண் பெயர்



28 என்ற எண்ணுருவை
இருபத்து எட்டு
என எழுதலாம். அதேபோன்று
128 என்ற எண்ணுருவை
நூற்று இருபத்து எட்டு
என எழுதலாம்.

கீழ்க்காணும்
எண்களின்
எண்பெயரை
எழுதுவோமா.



| எண்ணுரு | எண்பெயர் |
|---|---|
| 137 | நூற்று முப்பத்து ஏழு |
| 172 | |
| 225 | |
| 248 | |
| 301 | |
| 346 | |
| 439 | |
| 482 | |
| 535 | ஐநூற்று முப்பத்து ஐந்து |
| 591 | |
| 648 | |
| 672 | |
| 720 | |
| 776 | |
| 800 | |
| 875 | |
| 909 | தொள்ளாயிரத்து ஒன்பது |
| 992 | |
| 999 | |
| 1000 | ஆயிரம் |

**ஆசிரியருக்கு**

மாணவர்களுக்கு அவர்களது குறிப்பேட்டில் **1000** வரையிலான எண்களுக்கு எண்பெயர் எழுதப் பயிற்சி அளிக்கவும்.



## செயல்பாடு 1



வண்ணமிடுக :

கீழ்க்காணும் எண்களில்

- நூறுகளின் இடத்தில் 3 இருந்தால் நீல வண்ணம்,
- பத்துகளின் இடத்தில் 9 இருந்தால் பச்சை வண்ணம்,
- ஒன்றுகளின் இடத்தில் 5 இருந்தால் இளஞ்சிவப்பு வண்ணம்,
- நூறுகளின் இடத்தில் 7 இருந்தால் மஞ்சள் வண்ணம் இடுக.





## எண்கோடு

ஒரு நேர்க்கோட்டில் எண்கள் சம இடைவெளிகளில் குறிக்கப்பட்டால் அது எண்கோடு எனப்படும். எண் கோடு '0' ல் துவங்கி முடிவில்லாமல் செல்லக்கூடியது.




## ஒற்றை எண்களும், இரட்டை எண்களும்




0, 2, 4, 6, 8, 10, 12, 14, 16, 18, 20, 22, 24, 26... இரட்டை எண்கள் ஆகும்.

1, 3, 5, 7, 9, 11, 13, 15, 17, 19, 21, 23, 25, 27... ஒற்றை எண்கள் ஆகும்.



இரட்டை எண்கள் **0, 2, 4, 6, 8** என்ற எண்களைக் கொண்டும் ஒற்றை எண்கள் **1, 3, 5, 7, 9** என்ற எண்களைக் கொண்டும் முடிவடைவதைக் கவனி.

ஒரு வகுப்பறையில் மொத்த மாணவர்கள் 24 பேர் எனில் அவர்களை இரு சம குழுக்களாகப் பிரிக்க முடியும்.

24 = 12 + 12

எண்ணிக்கை இரட்டை எண் எனில் இரு சம குழுக்கள் அமைக்க முடியும்.



ஒரு வகுப்பறையில் 17 மாணவர்கள் இருந்தால் அவர்களை இரு சம குழுக்களாகப் பிரிக்க முடியாது.

17 = 8 + 8 மீதம் 1

எண்ணிக்கை ஒற்றை எண் எனில் இரு சம குழுக்களாக அமைக்க முடியாது.





முயன்று பார் !

இதே போன்று வேறு சில எண்களைக் கொண்டு ஒற்றை எண்ணா, இரட்டை எண்ணா எனக் கண்டுபிடி.

ஒவ்வொரு ஒற்றை எண்ணைத் தொடர்ந்து ஓர் இரட்டை எண்ணும், ஒவ்வொரு இரட்டை எண்ணைத் தொடர்ந்து ஓர் ஒற்றை எண்ணும் வரும் .



## பயிற்சி 1

| இரட்டை எண்களை வட்டமிடுக | ஒற்றை எண்களை வட்டமிடுக |
|---|---|
| 47, 52, 69, 70, 84 | 32, 41, 50, 67, 93 |
| 132, 145, 149, 174, 199 | 105, 116, 125, 142, 151 |
| 216, 400, 401, 432, 455 | 217, 232, 245, 342, 357 |
| 522, 564, 575, 587, 600 | 535, 540, 557, 561, 592 |
| 921, 926, 932, 938, 947 | 830, 841, 853, 862, 899 |



## மூன்றிலக்க எண்களில் தாவித்தாவி எண்ணுதல்

தவளையைப் போல் இரண்டிரண்டாகத் தாவிக் குதிப்போமா.




தவளை தொடர்ந்து தாவிச் செல்ல உதவுவோமா : 100, 102, 104, ___, ___, ___,

பத்துப் பத்தாகத் தாவி விடுபட்ட வட்டங்களை நிரப்புக :




பின்வரும் அமைப்பைப் பார்த்து விடுபட்ட இடங்களை நிரப்புக :






## எண்களை ஒப்பிடுதல்

அனிதாவிடம் **2** மிட்டாய்களும், அவளுடைய தங்கை வனிதாவிடம் **6** மிட்டாய்களும் உள்ளன.





யாரிடம் அதிகமான மிட்டாய்கள் உள்ளன?

அவர்கள் கீழ்க்கண்டவாறு ஒப்பிட்டார்கள்:




எண்கோட்டில் **2** என்ற எண் **6**க்கு முன்னாலும், **6** என்ற எண் **2** ஐத் தொடர்ந்தும் வருகிறது.

எண்கோட்டில்

- ஓர் எண்ணிற்கு முன்னால் வரும் எண் அந்த எண்ணை விடச் சிறியது.
- ஓர் எண்ணைத் தொடர்ந்து வரும் எண் அந்த எண்ணை விடப் பெரியது.

**6** என்ற எண் **2** என்ற எண்ணை விடப் பெரியது.

இதனை **6 > 2** என எழுதலாம்.

எனவே வனிதாவிடம் அதிகமான மிட்டாய்கள் உள்ளன.



அபிநயா **48** அஞ்சல்தலைகளையும் காயத்ரி **52** அஞ்சல்தலைகளையும் சேகரித்தால் குறைவான அஞ்சல்தலைகளை சேகரித்தது யார்?




எண் கோட்டில் 48 என்பது 52 க்கு முன்னால் வருகிறது.

எனவே 48 என்பது 52 ஐ விடச் சிறியது.

**48** < **52** என எழுதலாம்.

எனவே அபிநயா குறைவான அஞ்சல்தலைகளைச் சேகரித்துள்ளாள்.

பாலு 12 வண்ணப் பென்சில்கள் வைத்திருந்தான். மணியும் 12 வண்ணப் பென்சில்கள் வைத்திருந்தான். யாரிடம் அதிகமான வண்ணப் பென்சில்கள் உள்ளன ? யாரிடம் குறைவான வண்ணப் பென்சில்கள் உள்ளன ?

இருவரிடமும் உள்ள எண்ணிக்கையினை ஒப்பிடும்போது சமமாக உள்ளது.

இதனை 12 = 12. என எழுதலாம்.

இலக்கங்களின் எண்ணிக்கையைக் கொண்டு ஒப்பிடல் :

இரண்டு எண்களை ஒப்பிடும் பொழுது அதிக இலக்கங்களைக் கொண்ட எண் பெரிய எண் ஆகும்.

குறிப்பு:

அனைத்து ஓரிலக்க எண்களும், ஈரிலக்க எண்களை விடச் சிறியது.
அனைத்து ஈரிலக்க எண்களும், மூன்றிலக்க எண்களை விடச் சிறியது.

**112 ஐயும் 98 ஐயும் ஒப்பிடுக.**

| நூ | ப | ஒ |
|---|---|---|
| **1** | **1** | **2** |

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | **9** | **8** |

112 என்ற எண்ணில் 3 இலக்கங்களும், 98 என்ற எண்ணில் 2 இலக்கங்களும் உள்ளன. எனவே 112, 98 ஐ விடப் பெரியது.

இதனை **112** > **98** என எழுதுவோம்.

கீழே கொடுக்கப்பட்ட எண்களை ஒப்பிட்டு சிறிய எண்ணை வட்டமிடுக.

| | |
|---|---|
| 87, 145 | 191, 32 |
| 123, 46 | 29, 165 |

சம இலக்கங்கள் கொண்ட எண்களை ஒப்பிடுதல் :

இலக்கங்களின் எண்ணிக்கை சமமானால் எண்களின் இடமதிப்பைக் கொண்டு ஒப்பிட வேண்டும். நூறின் இடத்தில் பெரிய இலக்கத்தை உடைய எண் பெரிய எண் ஆகும்.

**123, 200** ஐ ஒப்பிடவும்.

| நூ | ப | ஒ |
|---|---|---|
| **1** | 2 | 3 |

| நூ | ப | ஒ |
|---|---|---|
| **2** | 0 | 0 |

நூறின் இடத்தில் உள்ள எண்களை ஒப்பிடுக. **2** என்பது **1** ஐ விடப் பெரியது. எனவே 200, 123 ஐ விடப் பெரியது. **200** > **123** என எழுதலாம். இதனையே **123** < **200** எனவும் எழுதலாம்.

நூறின் இடத்தில் உள்ள எண்கள் சமமாக இருந்தால் பத்தின் இடத்தை ஒப்பிடவும். பத்தின் இடத்தில் பெரிய இலக்கத்தை உடைய எண் பெரிய எண் ஆகும்.

**156** ஐயும் **131** ஐயும் ஒப்பிடுக.

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | **5** | 6 |

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | **3** | 1 |

நூறின் இடத்தில் உள்ள இலக்கங்கள் சமமாக இருப்பதால், பத்தின் இடத்தில் உள்ள இலக்கங்களை ஒப்பிடவும்.

**5,3** ஐ விடப் பெரியது. எனவே 156, 131 ஐ விடப் பெரியது **156** > **131** என எழுதலாம். இதனையே **131** < **156** எனவும் எழுதலாம்.



நூறின் இடத்தில் உள்ள இலக்கங்களும் பத்தின் இடத்தில் உள்ள இலக்கங்களும் சமமானால் ஒன்றின் இடத்தில் உள்ள இலக்கங்களை ஒப்பிடவேண்டும். ஒன்றின் இடத்தில் பெரிய இலக்கத்தை உடைய எண்ணே பெரிய எண் ஆகும்.

**165** மற்றும் **168** ஐ ஒப்பிடுக.

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 6 | **5** |

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 6 | **8** |

நூறின் இடத்தில் உள்ள இலக்கங்களும் பத்தின் இடத்தில் உள்ள இலக்கங்களும் சமமாய் இருப்பதால் ஒன்றின் இடத்தை ஒப்பிடவும்.

**8, 5** ஐ விடப் பெரியது. எனவே **168, 165** ஐ விடப் பெரியது.

**168** $>$ **165** என எழுதலாம். இதனையே **165** $<$ **168** எனவும் எழுதலாம்.

**326** மற்றும் **326** ஐ ஒப்பிடுக.

| நூ | ப | ஒ |
|---|---|---|
| **3** | **2** | **6** |

| நூ | ப | ஒ |
|---|---|---|
| **3** | **2** | **6** |

நூறு, பத்து மற்றும் ஒன்றின் இடத்தில் உள்ள இலக்கங்கள் சமமாக உள்ளதால் இதனை சமம் எனக் கூறவேண்டும்.

எனவே, **326** $=$ **326**

கீழே கொடுக்கப்பட்டுள்ள எண்களை ஒப்பிட்டு சிறிய எண்ணிற்கு வட்டமிடவும்.

173, 165

592, 595

335, 383

440, 404

## பயிற்சி 2

கீழ்க்கண்ட எண்களை ஒப்பிட்டு கொடுக்கப்பட்டுள்ள கட்டங்களில் பொருத்தமான குறியீடுகளை இடுக. (< , >, =)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 312 | ☐ | 483 | 761 | ☐ | 683 |
| 419 | ☐ | 547 | 416 | ☐ | 419 |
| 408 | ☐ | 308 | 394 | ☐ | 387 |
| 387 | ☐ | 487 | 782 | ☐ | 782 |
| 512 | ☐ | 512 | 983 | ☐ | 990 |

### எண் வரிசை

சிறிய எண்ணிலிருந்து பெரிய எண்ணிற்கு வரிசைப்படுத்தி எழுதும் முறை ஏறுவரிசை எனப்படும்.

பெரிய எண்ணிலிருந்து சிறிய எண்ணிற்கு வரிசைப்படுத்தி எழுதும் முறை இறங்கு வரிசை எனப்படும்.

**144, 148** மற்றும் **145** ஐ ஏறுவரிசையிலும், இறங்குவரிசையிலும் அமைக்க.

எண்கோட்டைப் பார் :




**144, 145** ஐ விடச் சிறியது.

**145, 148** ஐ விடச் சிறியது.



**ஏறு வரிசை :**

144 < 145 < 148

144, 145, 148

**இறங்கு வரிசை :**

148 > 145 > 144

148, 145, 144

## பயிற்சி 3

**1. கீழ்க்கண்ட எண்களை ஏறுவரிசையில் அமைக்க :**

(அ) 248, 253, 384



(ஆ) 492, 499, 493



(இ) 569, 539, 589



(ஈ) 795, 759, 756



**2. கீழ்க்கண்ட எண்களை இறங்குவரிசையில் அமைக்க :**

(அ) 205, 210, 290



(ஆ) 212, 503, 369



(இ) 323, 303, 332



(ஈ) 405, 407, 437



## கொடுக்கப்பட்ட இலக்கங்களைக் கொண்டு மிகப் பெரிய எண் மற்றும் மிகச் சிறிய எண் உருவாக்குதல்




மேற்கண்ட எண்களைக் கொண்டு எவ்வாறு மிகப் பெரிய எண்ணை உருவாக்க இயலும்?




மிகப் பெரிய எண் : **521**




மிகச் சிறிய எண் : **125**



மற்றொரு எடுத்துக்காட்டைக் காண்போம்:



1, 0, 3 ஆகியவை கொடுக்கப்பட்ட எண்கள்.



இந்த இலக்கங்களைப் பயன்படுத்தி மூன்றிலக்க மிகப்பெரிய மற்றும் மிகச் சிறிய எண் கூறமுடியுமா ?



மூன்று இலக்க மிகப் பெரிய எண் 310.



மூன்று இலக்க மிகச் சிறிய எண் 013.



ஆனால் 013 என்பது ஈரிலக்க எண் ஆயிற்றே!



அப்படியா! வேறு எப்படிக் கூறுவது?



எண்கள் பூச்சியத்தைக் கொண்டு ஆரம்பமாகாது.



நான் கண்டுபிடித்து விட்டேன்.
**103** என்பது மிகச் சிறிய எண்.

## பயிற்சி 4

கீழ்க்காணும் இலக்கங்களைக் கொண்டு மூன்றிலக்க மிகப் பெரிய எண், மிகச் சிறிய எண்ணை உருவாக்கி எழுதுக.

| இலக்கங்கள் | மிகப் பெரிய எண் | மிகச் சிறிய எண் |
| --- | --- | --- |
| 5 7 4 | | |
| 3 6 9 | | |
| 8 0 1 | | |



## செயல்பாடு 4

- 0 முதல் 9 வரையிலான எண் அட்டைகள் தயாரிக்கவும்.
- அட்டைகளை எண்கள் தெரியாதவாறு வைக்கவும்.
- ஏதேனும் **3** அட்டைகளை எடுத்து மூன்றிலக்க எண்களை உருவாக்கவும்.
- உருவாக்கிய எண்களில் மிகப் பெரிய எண் மற்றும் மிகச் சிறிய எண் கண்டுபிடிக்கவும்.
- நண்பர்களோடு சேர்ந்து புதிய எண்களை உருவாக்கி மகிழ்க.

0 1 2 3 4 5 6 7 8 9



## பயிற்சித்தாள்

நாள் : ..............................

**1)** விடுபட்ட எண்களை நிரப்புக.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 551 | | 561 | | | | | | | 596 |
| 552 | | | | | | | | | |
| 553 | | | | | | | | | |
| | | | | | | | | | |
| | | | 570 | | | | | | 600 |

**2)** எண்பெயரை எழுதுக.

254 ______________________

486 ______________________

595 ______________________

991 ______________________

1000 ______________________

**3.** கோடிட்ட இடத்தை நிரப்புக.

அ) 266 என்ற எண்ணில் _______ நூறுகள் _______ பத்துகள் _______ ஒன்றுகள் உள்ளன.

ஆ) 405 என்ற எண்ணில் _______ நூறுகள் _______ பத்துகள் _______ ஒன்றுகள் உள்ளன.

இ) 574 என்ற எண்ணில் _______ நூறுகள் _______ பத்துகள் _______ ஒன்றுகள் உள்ளன.

ஈ) 896 என்ற எண்ணில் _______ நூறுகள் _______ பத்துகள் _______ ஒன்றுகள் உள்ளன.

உ) 999 என்ற எண்ணில் _______ நூறுகள் _______ பத்துகள் _______ ஒன்றுகள் உள்ளன.

**4.** **சரியான எண்ணைக் கட்டமிட்டுக் காட்டுக.**

| | | | |
|---|---|---|---|
| அ) 3 நூறுகள் 9 பத்துகள் 0 ஒன்றுகள் | 309, | 390, | 903 |
| ஆ) 5 நூறுகள் 2 பத்துகள் 2 ஒன்றுகள் | 522, | 225, | 520 |
| இ) 6 நூறுகள் 5 பத்துகள் 1 ஒன்று | 156, | 651, | 516 |
| ஈ) 9 நூறுகள் 0 பத்துகள் 9 ஒன்றுகள் | 990, | 909, | 900 |

**5.** **வட்டமிடப்பட்டுள்ள இலக்கங்களின் இடமதிப்பைக் கூறுக.**

அ) (7) 2 5 ஆ) 9 (4) 7 இ) 1 4 (5)

**6.** **ஐந்து ஐந்தாகத் தாவி எழுதுக.**




**7.** **ஒற்றை எண்கள் மற்றும் இரட்டை எண்களைக் கண்டுபிடி.**

**133, 146, 327, 548, 575, 932, 601, 99, 74, 500.**

ஒற்றை எண்கள் :

இரட்டை எண்கள் :



**8.** எண்களை ஒப்பிட்டு பொருத்தமான **<, >, =** குறியிடுக.

| | | |
|---|---|---|
| 118 | | 340 |
| 225 | | 176 |
| 347 | | 325 |

| | | |
|---|---|---|
| 875 | | 600 |
| 500 | | 500 |
| 925 | | 928 |

**9.** வட்டத்தில் கொடுக்கப்பட்டுள்ள எண்களை ஏறுவரிசை மற்றும் இறங்கு வரிசையில் எழுதுக.




ஏறுவரிசை :

இறங்கு வரிசை :

**10.** 7, 4 மற்றும் 5 என்ற இலக்கங்களைப் பயன்படுத்தி மூன்றிலக்க மிகப் பெரிய மற்றும் மிகச் சிறிய எண்ணை உருவாக்குக.

மிகப் பெரிய எண் :

மிகச் சிறிய எண் :

குறிப்பு

ஆசிரியர் கையொப்பம்

# 4 கூட்டல்

நினைவுகூர்வோம்

**பின்வரும் கூட்டல் அட்டவணையை நிரப்புக :**

| + | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | | | | | | | | | | |
| 1 | | | | | | | | | | |
| 2 | | | | | | | | | | |
| 3 | | | 16 | | | | | | | |
| 4 | | | | | | | | | | |
| 5 | | | | | | | | | | |
| 6 | | | | | | | | | | |
| 7 | | | | | | 23 | | | | |
| 8 | | | | | | | | | | |
| 9 | | | | | | | | | | |
| 10 | | | | | | | | | | 30 |

**மேற்கண்ட அட்டவணையைப் பயன்படுத்திக் கட்டங்களை நிரப்புக.**

3 + 15 = ☐      ☐ + 14 = 20

4 + 19 = ☐      13 + ☐ = 22

16 + 3 = ☐      ☐ + ☐ = 28



## மூன்று இலக்க எண்களில் கூட்டல் ( இனமாற்றமின்றி )

**கூட்டுக :**

```
   2 1 5
 + 4 2 3
 --------
 --------
```

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 2 | 1 | 5 |
| 4 | 2 | 3 |

முதலில் ஒன்றுகளைக் கூட்டுகிறோம் :

5 + 3 = 8

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 2 | 1 | 5 |
| 4 | 2 | 3 |
| | | 8 |

8 ஒன்றுகளை ஒன்றுகளுக்கு நேராக எழுதுகிறோம்.

பிறகு பத்துகளைக் கூட்டுகிறோம் :



1 + 2 = 3

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 2 | 1 | 5 |
| 4 | 2 | 3 |
| | 3 | 8 |

3 பத்துகளைப் பத்துகளுக்கு நேராக எழுதுகிறோம்.

அதன் பின் நூறுகளைக் கூட்டுகிறோம் :



2 + 4 = 6

6 நூறுகளை நூறுகளுக்கு நேராக எழுதுகிறோம்

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 2 | 1 | 5 |
| 4 | 2 | 3 |
| 6 | 3 | 8 |

$$\begin{array}{r} 2\ 1\ 5 \\ +\ 4\ 2\ 3 \\ \hline 6\ 3\ 8 \\ \hline \end{array}$$



நினைவில் கொள்க :
கூட்டலில் முதலில்
ஒன்றுகளைக் கூட்ட வேண்டும்.
பின்னர் பத்துகள், நூறுகள் என
வரிசையாகக் கூட்டவேண்டும்.



## ஆணிமணிச்சட்டத்தின் மூலம் கூட்டல்.

கூட்டுக.

```
   1 4 3
 + 5 1 2
 ----------

 ----------
```




143 உடன் 512 ஐக் கூட்டுக.

படி 1:

முதலில் ஒன்றுகளைக் கூட்டுகிறோம் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 4 | 3 |
| + 5 | 1 | 2 |
| | | 5 |




ஒன்றுகளின் இடத்தில் இருக்கும் 3 மணிகளோடு 2 மணிகளைச் சேர்க்கவும்.

3 + 2 = 5

படி 2 :

பிறகு பத்துகளைக் கூட்டுகிறோம் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 4 | 3 |
| + 5 | 1 | 2 |
| | 5 | 5 |




பத்துகளின் இடத்தில் இருக்கும் 4 மணிகளோடு 1 மணியைச் சேர்க்கவும்.

4 + 1 = 5

படி 3 :

நூறுகளைக் கூட்டுக :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 4 | 3 |
| + 5 | 1 | 2 |
| 6 | 5 | 5 |




நூறுகளின் இடத்தில் இருக்கும் 1 மணியுடன் 5 மணிகளைச் சேர்க்கவும்.

1 + 5 = 6

எனவே கூடுதல் 655

## எடுத்துக்காட்டு

கூட்டுக:

| | | | |
|---|---|---|---|
| | 5 | 2 | 2 |
| + | 4 | 5 | 3 |
| | | | |

படி 1 :

ஒன்றுகளைக் கூட்டவும்.

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 5 | 2 | 2 |
| + | 4 | 5 | 3 |
| | | | 5 |

படி 2 :

பத்துகளைக் கூட்டவும்.

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 5 | 2 | 2 |
| + | 4 | 5 | 3 |
| | | 7 | 5 |



படி 3 :

நூறுகளைக் கூட்டவும்.

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 5 | 2 | 2 |
| + | 4 | 5 | 3 |
| | 9 | 7 | 5 |

```
  5 2 2
+ 4 5 3
-------
  9 7 5
-------
```

## பயிற்சி 1

**கீழ்க்கண்ட எண்களைக் கூட்டுக:**

```
  5 4 3        2 3 8        5 2 2
+ 4 2 1      + 6 3 1      + 4 2 6
[     ]      [     ]      [     ]
```

```
  1 0 1        6 3 0        2 3 4
  1 2 1        2 5 4        1 0 3
+ 7 0 3      + 1 1 3      + 3 1 1
[     ]      [     ]      [     ]
```

## மூன்று இலக்க எண்களில் கூட்டல் ( இனமாற்றத்துடன் )

### எடுத்துக்காட்டு

கூட்டுக :

```
    4 1 6
  + 2 4 7
  --------
  --------
```

| நூ | ப | ஒ | நூ | ப | ஒ |
|---|---|---|---|---|---|
| 4 | 1 | 6 | 2 | 4 | 7 |

முதலில் ஒன்றுகளைக் கூட்டுகிறோம் :







6 + 7 = 13

13 ஒன்றுகள் = 1 பத்து + 3 ஒன்றுகள்

எனவே 3ஐ ஒன்றுகளின் இடத்திலேயும், 1 பத்தினை பத்துகளின் இலக்கங்களுக்கு மேலேயும் எழுதுகிறோம்.



| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 1 | |
| 4 | 1 | 6 |
| + 2 | 4 | 7 |
| | | 3 |

6 + 7 = 13 ஒன்றுகள்
13 ஒன்றுகள் = 1 பத்து + 3 ஒன்றுகள்

பிறகு பத்துகளைக் கூட்டுகிறோம் :




1 1 4 6

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 1 | |
| 4 | 1 | 6 |
| + 2 | 4 | 7 |
| | 6 | 3 |

1 + 1 + 4 = 6 பத்துகள்

பின்னர் நூறுகளைக் கூட்டுகிறோம் :




4 2 6

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 1 | |
| 4 | 1 | 6 |
| + 2 | 4 | 7 |
| 6 | 6 | 3 |

```
      1
   4  1  6
 + 2  4  7
 ---------
   6  6  3
 ---------
```

## ஆசிரியருக்கு

ஆணிமணிச்சட்டத்தின் மூலம் இனமாற்றக் கூட்டலை செய்து காண்பிக்கவும்.

### எடுத்துக்காட்டு

கூட்டுக:

```
    2 5 8
 +  1 9 4
 ---------

 ---------
```

ஒன்றுகளைக் கூட்டுக :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 1 | |
| 2 | 5 | 8 |
| + 1 | 9 | 4 |
| | | 2 |

8 + 4 = 12 ஒன்றுகள்.

12 ஒன்றுகள் = 1 பத்து + 2 ஒன்றுகள் என இனமாற்றம் செய்க.

1 பத்து, பத்துகளின் இடத்தில் சேர்க்கப்படுகிறது.

2 ஒன்றுகள், ஒன்றுகளின் இடத்திற்கு நேராக விடையாக எழுதப்படுகிறது.



பிறகு பத்துகளைக் கூட்டுகிறோம் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 1 | |
| 2 | 5 | 8 |
| + 1 | 9 | 4 |
| | 5 | 2 |

1 + 5 + 9 = 15 பத்துகள்,
15 பத்துகள் = 1 நூறு + 5 பத்துகள்
என இனமாற்றம் செய்யப்படுகிறது. 5 ஐப் பத்துகளின் இடத்தில் விடையாக எழுதப்படுகிறது.
1 நூறு நூறுகளின் இடத்தில் சேர்க்கப்படுகிறது.

பின்னர் நூறுகளைக் கூட்டுகிறோம் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 1 | 1 | |
| 2 | 5 | 8 |
| + 1 | 9 | 4 |
| 4 | 5 | 2 |

1 + 2 + 1 = 4 நூறுகள்.
4 ஐ நூறுகளின் இடத்தில் விடையாக எழுதவும்.

| | | | |
|---|---|---|---|
| | 1 | 1 | |
| | 2 | 5 | 8 |
| + | 1 | 9 | 4 |
| | 4 | 5 | 2 |

## பயிற்சி 2

**கூட்டி விடையை எழுதுக :**

அ)

| | | | |
|---|---|---|---|
| | 3 | 5 | 8 |
| + | 4 | 9 | 0 |
| | | | |

ஆ)

| | | | |
|---|---|---|---|
| | 3 | 3 | 9 |
| + | 2 | 7 | 2 |
| | | | |

இ)

| | | | |
|---|---|---|---|
| | 2 | 8 | 5 |
| + | 5 | 4 | 2 |
| | | | |

ஈ)

| | | | |
|---|---|---|---|
| | 5 | 9 | 8 |
| + | 2 | 0 | 9 |
| | | | |

உ)

| | | | |
|---|---|---|---|
| | 4 | 5 | 5 |
| + | 5 | 4 | 5 |
| | | | |



## செயல்பாடு 1




**தேவையான பொருள்கள் :**

0 முதல் 4 வரையிலான எண் அட்டைகள்
(8 தொகுப்பு)

படி 1 :

மாணவர்களை சிறு குழுக்களாகப் பிரிக்கவும்.

படி 2 :

2 தொகுப்பு அட்டைகளை ஒவ்வொரு குழுவிற்கும் கொடுக்கவும்.

படி 3 :

எண் அட்டைகளைப் பயன்படுத்தி மூன்று இலக்க எண்களை உருவாக்கிக் கூட்டச்செய்யவும்.

படி 4 :

எந்தக் குழு அதிகக் கணக்குகளை உருவாக்கி சரியான விடை கண்டுபிடிக்கிறதோ அந்தக் குழுவே வெற்றி பெற்ற குழுவாக அறிவிக்கப்படுவர். வெற்றி பெற்ற குழுவிற்கு ஆசிரியர்



கணிதமேதை இராமானுஜம் குழு



எனப் பட்டம் அளிக்கலாம்.

### ஆசிரியருக்கு

கணிதமேதை இராமானுஜம் அவர்களைப் பற்றிய வியப்பூட்டும் நிகழ்வுகளைக் கூறி ஊக்குவிக்கவும்.



## வாழ்க்கைக் கணக்குகள்

### பயிற்சி 3

வாகனங்கள் நிறுத்தப்படும் இடத்தில் 275 இரு சக்கர வாகனங்களும், 112 மகிழுந்துகளும் நிறுத்தப்பட்டு இருந்தன. அந்த இடத்தில் நிறுத்தப்பட்டிருந்த மொத்த வாகனங்கள் எத்தனை ?



இரு சக்கர வாகனங்கள் = 275

மகிழுந்துகள் = 112

மொத்த வாகனங்கள் = ☐

ஒரு பழ வியாபாரி 195 ஆப்பிள் பழங்களும், 287 மாம்பழங்களும், 35 வாழைப்பழங்களும் விற்றார் எனில், அவர் விற்ற மொத்தப் பழங்களின் எண்ணிக்கை எவ்வளவு ?

ஆப்பிள் பழங்கள் = 195

மாம்பழங்கள் = 287

வாழைப் பழங்கள் = 35

மொத்தப் பழங்கள் = ☐



ஒரு தொடர் வண்டியில் ஒரு பெட்டியில் 132 பயணிகளும் மற்றொரு பெட்டியில் 129 பயணிகளும் இருந்தார்கள் எனில் இரு பெட்டிகளிலும் உள்ள மொத்தப் பயணிகள் எத்தனை பேர் ?




முதல் பெட்டியில் உள்ள பயணிகள் =

இரண்டாவது பெட்டியில் உள்ள பயணிகள் =

மொத்தப் பயணிகள் = ☐

ஒரு பள்ளியில் இருந்த மொத்த மாணவர்களில் 456 மாணவர்கள் மட்டைப்பந்து விளையாடவும், 395 மாணவர்கள் கால்பந்து விளையாடவும் விருப்பம் தெரிவித்தனர் எனில் விளையாட விருப்பம் தெரிவித்த மாணவர்கள் எத்தனை பேர் ?




மட்டைப்பந்து விளையாட விருப்பம் தெரிவித்தோர் =

கால்பந்து விளையாட விருப்பம் தெரிவித்தோர் =

விருப்பம் தெரிவித்த மொத்த மாணவர்கள் =

ஒரு நூலகத்தில் 427 கதைப் புத்தகங்களும், 152 கல்லூரிப் புத்தங்களும், 133 பொறியியல் புத்தங்களும் இருந்தன என்றால் நூலகத்தில் இருந்த மொத்தப் புத்தகங்கள் எத்தனை ?

கதைப் புத்தகங்கள் =

கல்லூரிப் புத்தகங்கள் =

பொறியியல் புத்தகங்கள் =

மொத்தப் புத்தகங்கள் =



## பயிற்சி 4

கீழ்க்கண்ட வாழ்க்கைக் கணக்குகளைச் செய்து விடை காண்க.

1. ஒரு தையற்காரர் 125 வெள்ளை பொத்தான்களையும் 165 சிவப்புப் பொத்தான்களையும் வாங்கினார். தையற்காரர் மொத்தம் எத்தனை பொத்தான்களை வாங்கினார் ?

2. ஒரு புத்தக விற்பனையாளர் 789 தமிழ்ப் புத்தகங்களையும், 149 ஆங்கிலப் புத்தகங்களையும் ஒரு நூலகத்திற்கு வழங்கினார். நூலகத்திற்கு அவர் வழங்கிய புத்தகங்கள் எத்தனை ?

3. ஒரு தோப்பில் 279 தென்னை மரங்களும், 387 மாமரங்களும் உள்ளன. தோப்பில் உள்ள மொத்த மரங்கள் எத்தனை ?






நாள் : ....................

1) கூட்டி விடை எழுதுக.

| | | |
|---|---|---|
| 3 1 2 | 3 3 4 | 5 7 6 |
| + 4 6 5 | + 4 3 2 | + 4 0 3 |
| | | |

| | | |
|---|---|---|
| 5 4 8 | 6 0 3 | 7 8 5 |
| + 3 2 4 | + 1 5 8 | + 1 2 9 |
| | | |

2) எண் பெயருக்கேற்ற எண்களை எழுதிக் கூட்டுக.

அ) நூற்று எண்பது, நானூற்று அறுபத்து ஐந்து.

| | | |
|---|---|---|
| 1 | 8 | 0 |
| + 4 | 6 | 5 |
| | | |

ஆ) நானூற்றுப் பத்து, இருநூற்று தொண்ணூற்று ஐந்து. +

இ) ஐநூற்று தொண்ணூற்று ஏழு, முந்நூற்று முப்பத்து இரண்டு. +

ஈ) இருநூற்று எழுபத்து ஒன்பது, அறுநூற்று நாற்பத்து ஒன்று +

உ) முந்நூற்று எண்பத்து இரண்டு, இருநூற்று தொண்ணூற்று ஒன்று. +

3) கீழே கொடுக்கப்பட்டுள்ள வாழ்க்கைக் கணக்குகளுக்கு விடையளி.

அ) ஒரு துணிக்கடையில் திங்கள்கிழமை 101 ஆடைகளும், செவ்வாய்க்கிழமை 221 ஆடைகளும் விற்கப்பட்டன. இரு தினங்களிலும் சேர்ந்து மொத்தம் விற்கப்பட்ட ஆடைகள் எத்தனை ?

ஆ) ஒரு கிராமத்தில் 272 ஆண்களும், 231 பெண்களும், 211 குழந்தைகளும் இருந்தனர் எனில் அந்த ஊரின் மொத்த மக்கள் தொகை எவ்வளவு ?

இ) ஒரு பள்ளியின் முதல்வர், விளையாட்டில் வெற்றி பெற்றவர்களுக்கு 111 பதக்கங்களையும், தேர்வில் வெற்றி பெற்றவர்களுக்கு 99 பதக்கங்களையும் வழங்கினார் எனில் அவர் வழங்கிய மொத்தப் பதக்கங்கள் எத்தனை ?

குறிப்பு

ஆசிரியர் கையொப்பம்

# 5 கழித்தல்

## நினைவுகூர்வோம்

சென்ற வகுப்பில் இரண்டு இலக்க எண்களில் கழிக்கும் முறையைப் பற்றி படித்தோம்.





மொத்தப் பந்துகள் எடுக்கப்பட்ட பந்துகள் மீதமுள்ள பந்துகள்

6 – 2 = 





மொத்தப் பழங்கள் எடுக்கப்பட்ட பழங்கள் மீதமுள்ள பழங்கள்

4 – 4 = 





மொத்தப் பூக்கள் எடுக்கப்பட்டவை மீதமுள்ள பூக்கள்

5 – 0 = 



## செயல்பாடு 1

4, 8, 2, 5, 6, 3 என்பன விடைகள். விடைகளுக்கு ஏற்ற பொருத்தமான கழித்தல் கணக்குகளுக்கு வண்ணமிடுக.

| | | | | |
|---|---|---|---|---|
| 4 | 10 - 3 | 10 - 6 | 9 - 5 | 4 - 5 |
| 8 | 9 - 1 | 10 - 3 | 8 - 1 | 10 - 2 |
| 2 | 6 - 4 | 7 - 2 | 2 - 1 | 5 - 3 |
| 5 | 6 - 1 | 10 - 4 | 7 - 6 | 10 - 5 |
| 6 | 7 - 1 | 10 - 3 | 8 - 1 | 9 - 3 |
| 3 | 6 - 2 | 7 - 4 | 5 - 2 | 9 - 4 |



## செயல்பாடு 2




வட்டத்திற்குள் இருக்கும் எண்களைக் கொண்டு கழித்தல் கணக்குகளை உருவாக்கி விடை காண்க.

**எடுத்துக்காட்டு**

| | |
|---|---|
| 5 | 1 |
| 3 | 2 |
| 1 | 9 |

கிருபா மேற்கண்ட கணக்கை உருவாக்கி சரியான விடையைக் கண்டுபிடித்தாள். உங்களால் எத்தனை கணக்குகள் உருவாக்கி விடை காண முடியும்? உங்கள் குறிப்பேட்டில் முயற்சி செய்து பாருங்கள்.



## மூன்று இலக்க எண்களில் கழித்தல் ( இனமாற்றமின்றி )

கழிக்க :

```
   5 3 6
 − 3 2 1
 --------
 --------
```

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 5 | 3 | 6 |

படி 1: ஒன்றுகளைக் கழிக்கவும் :

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 5 | 3 | 6 |
| − | 3 | 2 | 1 |
| | | | 5 |



6 ஒன்றுகள் − 1 ஒன்று = 5 ஒன்றுகள்

5 ஐ ஒன்றுகள் இடத்தில் எழுதவும்.

படி 2 : பத்துகளைக் கழிக்கவும் :

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 5 | 3 | 6 |
| − | 3 | 2 | 1 |
| | | 1 | 5 |



3 பத்துகள் − 2 பத்துகள் = 1 பத்து

1 ஐப் பத்துகள் இடத்தில் எழுதவும்.

படி 3 : நூறுகளைக் கழிக்கவும் :

| நூ | ப | ஒ |
| --- | --- | --- |
| 5 | 3 | 6 |
| – 3 | 2 | 1 |
| 2 | 1 | 5 |



5 நூறுகள் – 3 நூறுகள் = 2 நூறுகள்

2 ஐ நூறுகள் இடத்தில் எழுதவும்.

```
   5 3 6
 – 3 2 1
 -----------
   2 1 5
 -----------
```



**நினைவில் கொள்க :**
கழித்தலில் முதலில் ஒன்றுகளைக் கழிக்கிறோம். பின்னர் பத்துகள், நூறுகள் என வரிசையாகக் கழிக்கிறோம்.

ஆணிமணிச்சட்டத்தின் மூலம் கழித்தல் :

| நூ | ப | ஒ |
| --- | --- | --- |
| 8 | 4 | 9 |
| – 5 | 2 | 4 |
| | | |





படி 1 :

முதலில் ஒன்றுகளைக் கழிக்கவும் :

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 8 | 4 | 9 |
| — | 5 | 2 | 4 |
| | | | 5 |




ஒன்றுகளின் இடத்தில் உள்ள
9 மணிகளில் 4 மணிகளை நீக்குக.
மீதம் 5 மணிகள்.
9 ஒன்றுகள் – 4 ஒன்றுகள் = 5 ஒன்றுகள்.
5 ஐ ஒன்றுகள் இடத்தில் எழுதவும்.

படி 2 :

பிறகு பத்துகளைக் கழிக்கவும் :

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 8 | 4 | 9 |
| — | 5 | 2 | 4 |
| | | 2 | 5 |




பத்துகளின் இடத்தில் உள்ள
4 மணிகளில் 2 மணிகளை நீக்குக.
மீதம் 2 மணிகள்.
4 பத்துகள் – 2 பத்துகள் = 2 பத்துகள்
2 ஐப் பத்துகள் இடத்தில் எழுதவும்

படி 3 :

பின்னர் நூறுகளைக் கழிக்கவும் :

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 8 | 4 | 9 |
| — | 5 | 2 | 4 |
| | 3 | 2 | 5 |




நூறுகளின் இடத்தில் உள்ள
8 மணிகளில் 5 மணிகளை நீக்குக.
மீதம் 3 மணிகள்.
8 நூறுகள் – 5 நூறுகள் = 3 நூறுகள்.
3 ஐ நூறுகள் இடத்தில் எழுதவும்.



**இப்பொழுது ஆணிமணிச்சட்டம் குறிக்கும் எண் 325.**



## எடுத்துக்காட்டு

கழிக்க:

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 4 | 5 | 7 |
| – | 2 | 4 | 3 |
| | | | |

படி 1 :

ஒன்றுகளைக் கழிக்கவும்.

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 4 | 5 | 7 |
| – | 2 | 4 | 3 |
| | | | 4 |

படி 2 :

பத்துகளைக் கழிக்கவும்.

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 4 | 5 | 7 |
| – | 2 | 4 | 3 |
| | | 1 | 4 |

படி 3 :

நூறுகளைக் கழிக்கவும்.

| | நூ | ப | ஒ |
|---|---|---|---|
| | 4 | 5 | 7 |
| – | 2 | 4 | 3 |
| | 2 | 1 | 4 |

**4 5 7**
**– 2 4 3**
**-----------**
**2 1 4**
**-----------**



## பயிற்சி 1

கழித்து விடை காண்க :

|   |   |   |
|---|---|---|
|   | 2 | 5 | 7 |
| − | 1 | 4 | 3 |

|   |   |   |   |
|---|---|---|---|
|   | 4 | 5 | 4 |
| − | 2 | 3 | 2 |

|   |   |   |   |
|---|---|---|---|
|   | 5 | 9 | 1 |
| − | 3 | 6 | 0 |

|   |   |   |   |
|---|---|---|---|
|   | 7 | 3 | 8 |
| − | 5 | 0 | 2 |

|   |   |   |   |
|---|---|---|---|
|   | 8 | 6 | 9 |
| − | 7 | 3 | 5 |

|   |   |   |   |
|---|---|---|---|
|   | 9 | 4 | 8 |
| − | 4 | 3 | 7 |

## மூன்று இலக்க எண்களில் கழித்தல் ( இனமாற்றத்துடன் )

எடுத்துக்காட்டு

கழிக்க :

|   |   |   |   |
|---|---|---|---|
|   | 2 | 5 | 3 |
| − | 1 | 2 | 7 |



படி 1 : ஒன்றுகளைக் கழிக்கவும் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 4 | 13 |
| 2 | ~~5~~ | ~~3~~ |
| – 1 | 2 | 7 |
| | | 6 |



3 ஒன்றுகளிலிருந்து 7 ஒன்றுகளைக் கழிக்க முடியாது. எனவே 5 பத்துகளிலிருந்து ஒரு பத்தினை பத்து ஒன்றுகளாக இனமாற்றம் செய்து ஒன்றுகளுடன் கூட்டுக.

கழிக்க : 13 ஒன்றுகள் – 7 ஒன்றுகள் = 6 ஒன்றுகள்

$13 - 7 = 6$

6 ஐ ஒன்றுகள் இடத்தில் எழுதவும்.

படி 2 : பின்னர் பத்துகளைக் கழிக்கவும் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 4 | 13 |
| 2 | ~~5~~ | ~~3~~ |
| – 1 | 2 | 7 |
| | 2 | 6 |



கழிக்க: 4 பத்துகள் – 2 பத்துகள் = 2 பத்துகள்

$4 - 2 = 2$

2 ஐப் பத்துகள் இடத்தில் எழுதவும்.



படி 3 : பின்னர் நூறுகளைக் கழிக்கவும் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 4 | 13 |
| 2 | ~~5~~ | ~~3~~ |
| – 1 | 2 | 7 |
| 1 | 2 | 6 |



கழிக்க : 2 நூறுகள் – 1 நூறு = 1 நூறு

2 – 1 = 1

1 ஐ நூறுகள் இடத்தில் எழுதவும்.

**126** என்பது விடையாகும்.

## எடுத்துக்காட்டு

கழிக்க :

| | | |
|---|---|---|
| 8 | 0 | 3 |
| – 2 | 3 | 7 |
| | | |

படி 1 : ஒன்றுகளைக் கழிக்கவும் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| 7 | 10 | |
| ~~8~~ | ~~0~~ | 3 |
| – 2 | 3 | 7 |
| | | |

3 ஒன்றுகளிலிருந்து 7 ஒன்றுகளைக் கழிக்க முடியாது. எனவே பத்துகளை இனமாற்றம் செய்யவும். பத்துகளின் இடத்தில் பூச்சியம் இருப்பதால் 1 நூறினைப் பத்து பத்துகளாக்கவும்.

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 9 | |
| 7 | ~~10~~ | 13 |
| ~~8~~ | ~~0~~ | ~~3~~ |
| − 2 | 3 | 7 |
| | | 6 |

1 பத்தினை 10 ஒன்றுகளாக்கவும். அதை 3 ஒன்றுகளுடன் கூட்ட 13 கிடைக்கும்.

கழிக்க :

13 ஒன்றுகள் - 7 ஒன்றுகள் = 6 ஒன்றுகள்.

13 − 7 = 6

**6** ஐ ஒன்றுகள் இடத்தில் எழுதவும்.

படி 2 : பின்னர் பத்துகளைக் கழிக்கவும் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 9 | |
| 7 | ~~10~~ | 13 |
| ~~8~~ | ~~0~~ | ~~3~~ |
| − 2 | 3 | 7 |
| | 6 | 6 |

கழிக்க :

9 பத்துகள் - 3 பத்துகள் = 6 பத்துகள்.

9 − 3 = 6

**6** ஐ பத்துகள் இடத்தில் எழுதவும்.

படி 3 : பிறகு நூறுகளைக் கழிக்கவும் :

| நூ | ப | ஒ |
|---|---|---|
| | 9 | |
| 7 | ~~10~~ | 13 |
| ~~8~~ | ~~0~~ | ~~3~~ |
| − 2 | 3 | 7 |
| 5 | 6 | 6 |

கழிக்க :

7 நூறுகள் - 2 நூறுகள் = 5 நூறுகள்

7 − 2 = 5

**5** ஐ நூறுகள் இடத்தில் எழுதவும்.

விடை **566** ஆகும்.



## பயிற்சி 2

| | | |
|---|---|---|
| 3 6 5<br>– 2 2 9<br>_____ | 5 1 8<br>– 1 0 9<br>_____ | 2 4 7<br>– 2 8<br>_____ |
| 5 0 6<br>– 4 5 2<br>_____ | 7 8 4<br>– 1 9 5<br>_____ | 9 8 2<br>– 1 7 6<br>_____ |



## செயல்பாடு 3

மூன்று எண்களை எடுத்துக் கொள்வோம். (4, 3, 8)

மூன்றிலக்க மிகச் சிறிய எண்ணை உருவாக்கவும். (348)

மூன்றிலக்க மிகப் பெரிய எண்ணை உருவாக்கவும். (843)

பெரிய எண்ணிலிருந்து சிறிய எண்ணைக் கழிக்கவும்.(843 - 348)

வேறு பல எண்களுக்கு செய்து பார்.

## விந்தை

ஈரிலக்க எண் ஒன்றை எழுதிக்கொள்ளவும். (98)

இலக்கங்களை இடமாற்றம் செய்யவும். (89)

பெரிய எண்ணிலிருந்து சிறிய எண்ணைக் கழிக்கவும். (98 – 89 = 09)

இலக்கங்களை இடமாற்றம் செய்யவும். (90)

இரண்டு விடைகளையும் கூட்டவும். (09 + 90 = 99)

வேறு இரண்டு இலக்க எண்களுக்கு செய்து பார்.

நீ என்ன காண்கிறாய் ?

**வாழ்க்கைக் கணக்குகள்**

## பயிற்சி 3

ஒரு பள்ளியில் 985 மாணவ மாணவியர் படிக்கின்றனர். அவர்களில் 490 பேர் மாணவிகள் எனில் மாணவர்கள் எத்தனை பேர்?



மொத்த மாணவ மாணவியர்கள் = 9 8 5

மாணவிகள் = 4 9 0

மாணவர்கள் = ☐

ஒரு கிராமத்தின் மொத்த மக்கள் தொகை 992 பேர். இவர்களில் 547 பேர் ஆண்கள் எனில் பெண்கள் எத்தனை பேர்?



மொத்த மக்கள் தொகை = 9 9 2

ஆண்கள் = 5 4 7

பெண்கள் = ☐

ஒரு தொழிற்சாலையில் 842 பொம்மைகள் தயாரிக்கப்பட்டன. 575 பொம்மைகள் ஒரு விற்பனையாளரிடம் விற்கப்பட்டன. விற்கப்படாத பொம்மைகள் எத்தனை ?



தயாரிக்கப்பட்ட மொத்த பொம்மைகள் = 8 4 2

விற்பனையாளரிடம் விற்கப்பட்டவை = 5 7 5

மீதம் உள்ளவை = ☐

இரண்டு எண்களின் கூட்டுத்தொகை 700. அதில் ஓர் எண் 300 எனில் மற்றொரு எண் என்ன ?



கூட்டுத்தொகை = 7 0 0

ஓர் எண் = 3 0 0

மற்றொரு எண் = ☐






நாள்:.....................

**1)** கழித்து விடை காண்க :

| | | | |
|---|---|---|---|
| | 5 | 6 | 8 |
| — | 3 | 4 | 2 |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| | 6 | 3 | 2 |
| — | 4 | 1 | 0 |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| | 9 | 8 | 7 |
| — | 8 | 6 | 3 |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| | 7 | 8 | 2 |
| — | 3 | 5 | 8 |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| | 5 | 4 | 2 |
| — | 3 | 5 | 9 |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| | 4 | 3 | 0 |
| — | 1 | 2 | 4 |
| | | | |

**2)** முதல் வரிசையில் இருந்து கழித்தலைத் தொடங்கவும். கழிக்கப்படவேண்டிய எண்கள் அம்புக்குறியிட்டுக் காட்டப்பட்டுள்ளன. முதல் கணக்கு செய்து காட்டப்பட்டுள்ளது. கழித்தல் செயலைத் தொடர்ந்து செய்தால் **13** கிடைக்கும்.



**3) எண்களை எழுதி முதல் எண்ணிலிருந்து இரண்டாவது எண்ணைக் கழிக்க.**

அ) நானூற்று அறுபத்து ஐந்து, இருநூற்று நாற்பது.

ஆ) முந்நூற்றுப் பதிமூன்று, நூற்று இரண்டு.

இ) அறுநூற்று இருபத்து நான்கு,ஐநூற்று இருபத்து ஒன்பது.

ஈ) எண்ணூற்று எழுபத்து இரண்டு , ஐநூற்றுப் பதிமூன்று.

உ) எழுநூற்று அறுபத்து நான்கு, ஐநூற்று ஐம்பத்து ஏழு.

**4) விடை காண்க.**

| | |
|---|---|
| அ) ஒரு பெட்டியில் 895 குறிப்பேடுகள் உள்ளன. அவற்றில் 500 குறிப்பேடுகள் வழங்கப்பட்டு விட்டன. பெட்டியில் மீதம் உள்ள குறிப்பேடுகள் எத்தனை? | |
| ஆ) 780 இனிப்புகள் குழந்தைகளுக்காக வாங்கப்பட்டன. அவற்றில் 512 இனிப்புகள் வழங்கப்பட்டு விட்டன எனில் மீதம் உள்ள இனிப்புகள் எத்தனை? | |
| இ) இந்தியா – பாகிஸ்தான், ஒரு நாள் கிரிக்கெட் போட்டியில் இரு அணிகளும் சேர்ந்து மொத்தம் 700 ஓட்டங்கள் எடுத்தன. பாகிஸ்தான் 208 ஓட்டங்கள் எடுத்தது எனில் இந்தியா எடுத்த ஓட்டங்கள் எத்தனை? | |

குறிப்பு

ஆசிரியர் கையொப்பம்



## கூட்டல், கழித்தல் கணக்குகளுக்குக் கதைகள் உருவாக்குதல்

### கதை 1

பாலு என்பவர் காட்டிற்குச் சென்று விறகுகளைச் சேகரித்தார். அவற்றை கடைத் தெருவில் கொண்டு சென்று விற்க எண்ணினார். அவர் தன்னிடமிருந்த விறகுகளைப் பதினைந்து கட்டுகளாகக் கட்டினார். வழியில் ஒரு வயதான பெண்ணைச் சந்தித்தார். அவருக்கு உடல் நலமில்லாமல் இருந்ததால் விறகு சேகரிக்க இயலவில்லை. அதனால் அவர் உணவு தயாரிக்காமல் இருந்தார். பாலு இதனைக் கண்டு இரக்கப்பட்டு தன்னிடமிருந்த கட்டுகளில் 1 கட்டை அவருக்குக் கொடுத்தார்.

**1 கட்டு 10 குச்சிகளைக் கொண்டதாக இருந்தது.**



2 கட்டுகளில் _______ குச்சிகள் இருக்கும்.
இப்பொழுது அவரிடம் எத்தனை கட்டுகள் இருக்கும்?
7 கட்டுகளைக் கடைத்தெருவில் விற்றார் .
பாலுவிடம் மீதம் உள்ள கட்டுகள் எத்தனை?
பாலுவைப் போல நீங்களும் மற்றவர்களுக்கு உதவலாமே!
செய்வீர்களா ?

### கதை 2

திருமதி. ருக்மணி ஒரு சமூக சேவகி. அவர்களது தொண்டு நிறுவனத்தின் மூலம் பள்ளிக் குழந்தைகளுக்கு சீருடைகள் மற்றும் நோட்டுப்புத்தகங்கள் வழங்குவார். ஒரு நாள் இருவேறு பள்ளிகளுக்கு செல்ல வேண்டிய சூழல் ஏற்பட்டது. முதல் பள்ளியில் 43 மாணவர்களுக்கும், 42 மாணவிகளுக்கும், இரண்டாவது பள்ளியில் 117 மாணவர்களுக்கும், 108 மாணவிகளுக்கும் சீருடைகள் வாங்கித்தர தீர்மானித்தார். சீருடைகள் வழங்கும் தினத்தன்று இரண்டு பள்ளிகளிலும் 16 மாணவர்களும், 13 மாணவிகளும் பள்ளிக்கு வரவில்லை எனத் தெரிவிக்கப்பட்டது.



சீருடைகள் வழங்கும் தினத்தன்று மொத்தம் எத்தனை சீருடைகள் வழங்கப்பட்டது ? என்பதைக் கண்டுபிடிக்க திருமதி. ருக்மணி அவர்களுக்கு உதவுங்களேன்.



## கணக்குகளுக்குக் கதைகள் உருவாக்குவோமா :

கூட்டல் விவரங்களுக்கு சரியான கதைகள் அமைப்போமா ?



**எடுத்துக்காட்டு**

**22 + 12 = ?**

22 மாணவர்கள் பூங்காவிலும், 12 மாணவர்கள் விளையாட்டு மைதானத்திலும் இருந்தனர் எனில் மொத்த மாணவர்கள் எத்தனை பேர்?

## கீழ்க்கண்ட கணக்குகளுக்குக் கதைகள் உருவாக்குக:

**3 + 4 = ?**

ஒரு தோட்டக்காரர் தன்னுடைய தோட்டத்தில் ______ தென்னை மரக்கன்றுகளையும் ______ மாமரக்கன்றுகளையும் நட்டார் எனில் மொத்தம் எத்தனை கன்றுகள் நட்டார் ?

ஒருபள்ளியில்________மாணவர்களும்________ மாணவிகளும் படிக்கின்றனர் எனில் ____________ _____________ ____________?

**144 + 142 = ?**

**253 + 317 = ?**



## கழித்தல் விவரங்களுக்கு கதைகள் உருவாக்குக :

**100 - 12 = ?**

ராமு என்ற பழவியாபாரி தன்னிடமிருந்த 100 பழங்களில் 12 பழங்களை ஏழைகளுக்கு இலவசமாகக் கொடுத்தார் எனில் எத்தனை பழங்களை அவர் விற்பனை செய்தார் ?

கீதாவிடம் __________ ரூபாய் உள்ளது. அதில் ______ ரூபாய்க்கு ஒரு எழுதுகோல் வாங்கினாள். மீதம் அவளிடம் எவ்வளவு ரூபாய் இருக்கும்?

**50 - 15 = ?**

**130 - 125 = ?**



### செயல்பாடு 4

ஆசிரியர் சில எளிய கூட்டல் மற்றும் கழித்தல் கணக்குகளுக்குக் கதைகள் கூறத் தொடங்கவேண்டும். மாணவர்களை அதனைத் தொடர்ந்து ஒருவர் பின் ஒருவராகக் கூறச் செய்ய வேண்டும். ஆசிரியர் அதனைத் தொகுத்துக் கூறவேண்டும்.



## இரண்டு எண்களின் கூடுதல், வித்தியாசத்தை மதிப்பிடுதல்:

**27, 33, 45** ஆகிய எண்களை **10**ன் மடங்குகளுக்கு முழுமையாக்குவோம்.




என்ற எண்ணானது **20** க்கும் **30** க்கும் இடையில் அமைந்துள்ளது. ஆனால் **20**ஐ விட **30**க்கு அருகில் அமைந்துள்ளது. எனவே **27** என்ற எண் **30** என முழுமையாக்கப்படுகிறது. **33** என்ற எண் **30** க்கும் **40** க்கும் இடையில் அமைந்துள்ளது. ஆனால் **30**க்கு அருகாமையில் அமைந்துள்ளதால் **30** என முழுமையாக்கப்படுகிறது. **45** என்ற எண் **40**க்கும் **50**க்கும் இடையில் அமைந்துள்ளது. ஆனால் இரண்டு எண்களுக்கு நடுவில் அமைந்துள்ளதால் அது **50** என முழுமையாக்கப்படுகிறது.

### எடுத்துக்காட்டு

1) பத்துகளுக்கு முழுமையாக்கிக் கூட்டுக. உண்மையான மதிப்பையும் காண்க.

| கூட்டல் விவரம் | முழுமையாக்கிக் கூட்டிய பின் மதிப்பு | உண்மையான மதிப்பு |
|---|---|---|
| 12<br>+ 15 | 10<br>+ 20 | 12<br>+ 15 |
| கூடுதல் | 30 | 27 |

2) பத்துகளுக்கு முழுமையாக்கிக் கழிக்க. உண்மையான மதிப்பையும் காண்க.

| கழித்தல் விவரம் | முழுமையாக்கிக் கழித்த பின் மதிப்பு | உண்மையான மதிப்பு |
|---|---|---|
| 18<br>- 12 | 20<br>- 10 | 18<br>- 12 |
| வித்தியாசம் | 10 | 6 |



## பயிற்சி 4

1) பத்துகளுக்கு முழுமையாக்குக.

(அ) 16 ☐ (ஆ) 10 ☐ (இ) 23 ☐

(ஈ) 35 ☐ (உ) 46 ☐ (ஊ) 47 ☐

2) பத்துகளுக்கு முழுமையாக்கி இரண்டு எண்களின் கூடுதல் மற்றும் உண்மையான மதிப்பு காண்க.

| கூட்டல் விவரம் | முழுமை ஆக்கியபின் கூடுதல் | உண்மையான மதிப்பு |
|---|---|---|
| 13<br>+15 | 10<br>+20 | 13<br>+15 |
| கூடுதல் | | |

| கூட்டல் விவரம் | முழுமை ஆக்கியபின் கூடுதல் | உண்மையான மதிப்பு |
|---|---|---|
| 27<br>+33 | | |
| கூடுதல் | | |

3) பத்துகளுக்கு முழுமையாக்கி இரண்டு எண்களின் வித்தியாசம் மற்றும் உண்மையான மதிப்பு காண்க.

| கழித்தல் விவரம் | முழுமை ஆக்கியபின் வித்தியாசம் | உண்மையான மதிப்பு |
|---|---|---|
| 48<br>- 41 | 50<br>- 40 | 48<br>- 41 |
| வித்தியாசம் | | |

| கழித்தல் விவரம் | முழுமை ஆக்கியபின் வித்தியாசம் | உண்மையான மதிப்பு |
|---|---|---|
| 30<br>-21 | | |
| வித்தியாசம் | | |






ஒரு பெட்டியில் 12 பென்சில்கள் இருந்தன. மேலும் 12 பென்சில்கள் சேர்த்தால் மொத்தம் எத்தனை பென்சில்கள் இருக்கும் ?



ஒரு கடைக்காரர் 25 முட்டைகள் வைத்திருந்தார். மேலும் 10 முட்டைகள் வாங்கினால் அவரிடம் தற்போது இருக்கும் மொத்த முட்டைகள் ––––



நான் என் தங்கையைக் காட்டிலும் 7 ஆண்டுகள் பெரியவன். என் தங்கையின் வயது 6 எனில் என்னுடைய வயது என்ன ?



மூன்றாம் வகுப்பில் 36 பேர் உள்ளனர். அவர்களில் 16 பேர் மாணவர்கள் எனில் மாணவிகள் எத்தனை பேர் ?



ஒரு தொழிற்சாலையில் முதல் நாள் 30 மின்விளக்குகள் தயாரிக்கப்பட்டன. இரண்டாவது நாள் எந்த மின்விளக்குகளும் தயாரிக்கபடவில்லை எனில் இரண்டு நாள்களிலும் சேர்த்து தயாரித்த மொத்த மின்விளக்குகள் எத்தனை ?



கோபுவிடம் 40 கோலிகள் இருந்தன. அவற்றில் 13 கோலிகளை தன் நண்பனுக்குக் கொடுத்தான் எனில் கோபுவிடம் தற்போது இருக்கும் கோலிகள் எத்தனை ?



மீனாவிடம் 12 பச்சை நாடாக்களும், 10 வெள்ளை நாடாக்களும் இருந்தன. மொத்தம் அவளிடம் உள்ள நாடாக்கள் எத்தனை ?



ஒரு நகரத்தில் 28 தொடக்கப்பள்ளிகளும், 20 மேல் நிலைப்பள்ளிகளும் உள்ளன. அந்த நகரத்தில் உள்ள மொத்தப் பள்ளிகள் எத்தனை ?



ஒரு பள்ளியில் நடைபெற்ற மட்டைப்பந்து விளையாட்டுப் போட்டியில் ஆனந்தன் முதல் ஆட்டத்தில் 30 ஓட்டங்களும், இரண்டாவது ஆட்டத்தில் 20 ஓட்டங்களும் எடுத்தான் எனில் அவன் எடுத்த மொத்த ஓட்டங்கள் எத்தனை ?

# 6 பெருக்கல்

**1.** ஒவ்வொரு தொகுப்பிலும் உள்ளவற்றின் எண்ணிக்கையை அடையாளம் காண்க.



2 கோழிகளின் தொகுப்பு



 பூக்களின் தொகுப்பு



 புத்தகங்களின் தொகுப்பு

இவை மாறுபட்ட எண்ணிக்கையில் உள்ள தொகுப்புகளாகும்.

**2.** சம எண்ணிக்கை கொண்ட தொகுப்புகளை அடையாளம் காண்க.

தொகுப்பு (அ)



தொகுப்பு (ஆ)



தொகுப்பு (இ)



தொகுப்பு (ஈ)



தொகுப்பு (உ)



சம எண்ணிக்கை கொண்ட தொகுப்புகள் ______ , ______ மற்றும் ______ ஆகும்

படத்தைப் பார்

2 பென்சில்கள் கொண்ட 3 தொகுப்புகள் உள்ளன.

2 + 2 + 2 = 6 பென்சில்கள்.

கீழ்க்காணும் பயிற்சியைச் செய்வோம்.

## பயிற்சி 1

பின்வருவனவற்றை நிரப்புக.

1.

3 + 3 + 3 + 3 = ☐

☐ தூரிகைகள் கொண்ட ☐ தொகுப்புகளில் உள்ள தூரிகைகளின் மொத்த எண்ணிக்கை ☐

2.

4 + 4 = ☐

☐ மண்பானைகள் கொண்ட ☐ தொகுப்புகளில் உள்ள மண்பானைகளின் மொத்த எண்ணிக்கை ☐

சம எண்ணிக்கை கொண்ட தொகுப்புகளில் உள்ள பொருள்களின் மொத்த எண்ணிக்கையை அறிய உதவும் மற்றொரு முறை **பெருக்கல்** ஆகும்.






ஒரே எண்ணைப் பலமுறை விரைவாகக் கூட்டுவதற்கான எளிய முறையைப் பெருக்கல் என்கிறோம். அதாவது பெருக்கல் என்பது தொடர் கூட்டல் ஆகும்.

'**X**' என்ற குறியீடு பெருக்கல் செயலைக் குறிக்க பயன்படுத்தப்படுகிறது.

## பெருக்கல் விவரம்



3 + 3 + 3 + 3 + 3 = 15

3 புறாக்கள் கொண்ட 5 தொகுப்புகளின் மொத்த எண்ணிக்கை 15.

இதனை 5 X 3 = 15 என எழுதலாம்.

ஒவ்வொரு தொகுப்பிலும் உள்ள புறாக்களின் எண்ணிக்கை

**5 X 3 = 15**

தொகுப்புகளின் எண்ணிக்கை

மொத்தப் புறாக்களின் எண்ணிக்கை

பெருக்கப்படும் எண்

பெருக்கும் எண் — **5 X 3 = 15** — பெருக்கல்பலன்

தொடர் கூட்டலுக்குப் பதில் பெருக்கல் செயலைப் பயன்படுத்துகிறோம் என்பதை அறிக.

**எடுத்துக்காட்டு**



| | | |
|---|---|---|
| தொகுப்புகளின் எண்ணிக்கை | = | 4 |
| ஒவ்வொரு தொகுப்பிலும் உள்ள மீன்களின் எண்ணிக்கை | = | 3 |
| மொத்த மீன்களின் எண்ணிக்கை | = | 12 |
| கூட்டல் விவரம் | = | 3+3+3+3 = 12 |
| பெருக்கல் விவரம் | = | 4 X 3 = 12 |

## பயிற்சி 2

நிரப்புக :

(1)



| | | |
|---|---|---|
| தொகுப்புகளின் எண்ணிக்கை | = | |
| ஒவ்வொரு தொகுப்பிலும் உள்ள பந்துகளின் எண்ணிக்கை | = | |
| மொத்தப் பந்துகளின் எண்ணிக்கை | = | |
| கூட்டல் விவரம் | = | |
| பெருக்கல் விவரம் | = | |



(2)





| | | |
|---|---|---|
| தொகுப்புகளின் எண்ணிக்கை | = | |
| ஒவ்வொரு தொகுப்பிலும் உள்ள யானைகளின் எண்ணிக்கை | = | |
| மொத்த யானைகளின் எண்ணிக்கை | = | |
| கூட்டல் விவரம் | = | |
| பெருக்கல் விவரம் | = | |

(3) கீழ்க்காணும் பெருக்கல் விவரங்களை கூட்டல் விவரங்களாக எழுதவும்.

| | | |
|---|---|---|
| 6 X 3 | = | 3 + 3 + 3 + 3 + 3 + 3 |
| 4 X 5 | = | |
| 7 X 4 | = | |
| 4 X 2 | = | |
| 2 X 10 | = | |

(4) கீழ்க்காணும் தொடர் கூட்டலைப் பெருக்கல் விவரங்களாக எழுதவும்.

| | | |
|---|---|---|
| 6 + 6 + 6 + 6 + 6 | = | 5 X 6 |
| 9 + 9 + 9 + 9 | = | 4 X |
| 8 + 8 + 8 | = | |

## பெருக்கல் வாய்பாடுகளை அமைத்தல்



### பெருக்கல் வாய்பாடு 2

| இரண்டு நட்சத்திரங்கள் கொண்ட தொகுப்பு | கூட்டல் விவரம் | பெருக்கல் விவரம் |
|---|---|---|
| | 2 | 1 x 2 = 2 |
| | 2+2 | 2 x 2 = 4 |
| | 2+2+2 | 3 x 2 = 6 |
| | 2+2+2+2 | 4 x 2 = 8 |
| | 2+2+2+2+2 | 5 x 2 = 10 |
| | 2+2+2+2+2+2 | 6 x 2 = 12 |
| | 2+2+2+2+2+2+2 | 7 x 2 = 14 |
| | 2+2+2+2+2+2+2+2 | 8 x 2 = 16 |
| | 2+2+2+2+2+2+2+2+2 | 9 x 2 = 18 |
| | 2+2+2+2+2+2+2+2+2+2 | 10 x 2 = 20 |



2–ன் மடங்குகளைக் கூறுவோமா ?




வாய்பாட்டைப் பயன்படுத்தி பயிற்சி செய்க.

| X | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2 | 2 | 4 | 6 | | | | | | | |

## பயிற்சி 3

நிரப்புக :

| | | | | |
|---|---|---|---|---|
| 8 | X | 2 | = | |
| 7 | X | 2 | = | |
| 9 | X | 2 | = | |
| 6 | X | 2 | = | |
| 10 | X | 2 | = | |
| 5 | X | 2 | = | |

## புதிர்

என்னை என்னோடு கூட்டினாலும் பெருக்கினாலும் ஒரே விடைதான் கிடைக்கும். நான் யார்?





## பெருக்கல் வாய்பாடு 3

| மூன்று மனிதர்கள் கொண்ட தொகுப்பு | கூட்டல் விவரம் | பெருக்கல் விவரம் |
|---|---|---|
| (1 தொகுப்பு) | 3 | 1 X 3 = 3 |
| (2 தொகுப்புகள்) | 3+3 | 2 X 3 = 6 |
| (3 தொகுப்புகள்) | 3+3+3 | 3 X 3 = 9 |
| (4 தொகுப்புகள்) | 3+3+3+3 | 4 X 3 = 12 |
| (5 தொகுப்புகள்) | 3+3+3+3+3 | 5 X 3 = 15 |
| (6 தொகுப்புகள்) | 3+3+3+3+3+3 | 6 X 3 = 18 |
| (7 தொகுப்புகள்) | 3+3+3+3+3+3+3 | 7 X 3 = 21 |
| (8 தொகுப்புகள்) | 3+3+3+3+3+3+3+3 | 8 X 3 = 24 |
| (9 தொகுப்புகள்) | 3+3+3+3+3+3+3+3+3 | 9 X 3 = 27 |
| (10 தொகுப்புகள்) | 3+3+3+3+3+3+3+3+3+3 | 10 X 3 = 30 |

**3 –ன் மடங்குகளைக் கூறுவோமா?**



எனக்கு மூன்று மூன்றாகத் தாவிக் குதிக்கப் பிடிக்கும் !




### வாய்பாட்டைப் பயன்படுத்தி பயிற்சி செய்க

| X | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 3 | 3 | | | 12 | | | 21 | | | |



## பயிற்சி 4

**1.** நிரப்புக :

3 X 3 = ☐

**2.** நிரப்புக :

4 X 3 = ☐

**3.** அட்டவணையைப் பூர்த்தி செய்க.

| X | 2 | 3 |
|---|---|---|
| 1 | | 3 |
| 2 | | |
| 3 | | |
| 4 | 8 | |
| 5 | | |
| 6 | | 18 |
| 7 | | |
| 8 | | |
| 9 | | |
| 10 | 20 | |

### புதிர்

**1.** ☐ X ☐ = 6

☐ X ☐ = 9

☐ X ☐ = 4

☐ மற்றும் ☐ கட்டங்களில் பொருத்தமான எண்களை நிரப்புக.

**2.**




மூலைவிட்டங்களின் முனைகளில் அமைந்துள்ள எண்களைப் பெருக்கினால் **12** கிடைக்குமாறு காலியாக உள்ள இடங்களில் தகுந்த எண்களை எழுதுக.



## பெருக்கல் வாய்பாடு 4

| நான்கு கால்கள் கொண்ட நாற்காலி | கூட்டல் விவரம் | பெருக்கல் விவரம் |
|---|---|---|
| | 4 | 1 X 4 = 4 |
| | 4+4 | 2 X 4 = 8 |
| | 4+4+4 | 3 X 4 = 12 |
| | 4+4+4+4 | 4 X 4 = 16 |
| | 4+4+4+4+4 | 5 X 4 = 20 |
| | 4+4+4+4+4+4 | 6 X 4 = 24 |
| | 4+4+4+4+4+4+4 | 7 X 4 = 28 |
| | 4+4+4+4+4+4+4+4 | 8 X 4 = 32 |
| | 4+4+4+4+4+4+4+4+4 | 9 X 4 = 36 |
| | 4+4+4+4+4+4+4+4+4+4 | 10 X 4 = 40 |



வாய்பாட்டைப் பயன்படுத்தி பயிற்சி செய்க.

| X | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | | 8 | | | 20 | | | | | |

## பயிற்சி 5



1. ஒரு பூந்தொட்டியில் 4 பூக்கள் உள்ளன. அதே போன்று 6 தொட்டிகளில் உள்ள பூக்களின் எண்ணிக்கை எவ்வளவு?

[ ] X [ ] = [ ]

2. நிரப்புக :

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 2 X | = | 8 | | 8 X 4 | = | |
| 4 X 4 | = | | | X 4 | = | 40 |
| X 4 | = | 20 | | 7 X | = | 28 |
| 3 X | = | 12 | | 9 X 4 | = | |

3. வாய்பாட்டைப் பூர்த்தி செய்க.

| X | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| 1 | | | |
| 2 | 4 | | |
| 3 | | 9 | |
| 4 | | | 16 |
| 5 | | | |
| 6 | | 18 | |
| 7 | | | 28 |
| 8 | | | |
| 9 | 18 | | |
| 10 | | | |

4. வட்டங்களை நிரப்புக.






## பெருக்கல் வாய்பாடு 5

| 5 இதழ்கள் கொண்ட பூக்கள் | கூட்டல் விவரம் | பெருக்கல் விவரம் |
|---|---|---|
| | 5 | 1 X 5 = 5 |
| | 5+5 | 2 X 5 = 10 |
| | 5+5+5 | 3 X 5 = 15 |
| | 5+5+5+5 | 4 X 5 = 20 |
| | 5+5+5+5+5 | 5 X 5 = 25 |
| | 5+5+5+5+5+5 | 6 X 5 = 30 |
| | 5+5+5+5+5+5+5 | 7 X 5 = 35 |
| | 5+5+5+5+5+5+5+5 | 8 X 5 = 40 |
| | 5+5+5+5+5+5+5+5+5 | 9 X 5 = 45 |
| | 5+5+5+5+5+5+5+5+5+5 | 10 X 5 = 50 |



வாய்பாட்டைப் பயன்படுத்தி பயிற்சி செய்க.

| X | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 5 | | 10 | | | 25 | | | 40 | | |

ஐந்தாம் பெருக்கல் வாய்பாட்டில் ஒன்றுகள் இடத்தில் இருக்கும் எண் **0** அல்லது **5** ஆக இருக்கும்.

## பயிற்சி 6

1. வாய்பாட்டைப் பூர்த்தி செய்க.

| X | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| 1 | | | 4 | |
| 2 | | | | 10 |
| 3 | 6 | | | |
| 4 | | | | |
| 5 | | 15 | | |
| 6 | | | 24 | |
| 7 | 14 | | | |
| 8 | | | | 40 |
| 9 | | 27 | | |
| 10 | | | | |

2. கட்டங்களை நிரப்புக.

3 X ☐ = 15
☐ X 5 = 45
8 X ☐ = 40
☐ X ☐ = 25
☐ X 5 = 5
2 X 5 = ☐
10 X 5 = ☐

3. பழங்களை அந்தந்தக் கூடைகளில் பொருத்தமாக வை.

22 9 35 14 25 21 27 5 16

**3–ன் மடங்குகள்** **5–ன் மடங்குகள்** **2–ன் மடங்குகள்**

## விந்தையைப் பார்


3 கத்தரிக்காய்கள் கொண்ட 4 தொகுப்புகள்


4 கத்தரிக்காய்கள் கொண்ட 3 தொகுப்புகள்



4 X 3 = 3 X 4 = 12

3 எண்ணிக்கையுள்ள 4 தொகுப்புகளிலும் 4 எண்ணிக்கையுள்ள 3 தொகுப்புகளிலும் உள்ள பொருள்களின் மொத்த எண்ணிக்கை 12 ஆகும்.



## பெருக்கல் வாய்பாடு 10

| 10 குச்சிகள் கொண்ட ஒரு கட்டு | கூட்டல் விவரம் | பெருக்கல் விவரம் |
|---|---|---|
| | 10 | 1 X 10 = 10 |
| | 10+10 | 2 X 10 = 20 |
| | 10+10+10 | 3 X 10 = 30 |
| | 10+10+10+10 | 4 X 10 = 40 |
| | 10+10+10+10+10 | 5 X 10 = 50 |
| | 10+10+10+10+10+10 | 6 X 10 = 60 |
| | 10+10+10+10+10+10+10 | 7 X 10 = 70 |
| | 10+10+10+10+10+10+10+10 | 8 X 10 = 80 |
| | 10+10+10+10+10+10+10+10+10 | 9 X 10 = 90 |
| | 10+10+10+10+10+10+10+10+10+10 | 10 X 10 = 100 |



வாய்பாட்டைப் பயன்படுத்தி பயிற்சி செய்க.

| X | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 10 | | | | | | | | | | |

அறிவுப் பெட்டகம்

பெருக்கல் பலனில் ஒன்றுகளின் இடத்தைப் பார்.

ஓ! அனைத்துப் பெருக்குத் தொகையிலும் ஒன்றுகள் இடத்தில் 0 உள்ளதே!

ஆம், 0 த்தில் முடியும் அனைத்து எண்களும் 10–ன் மடங்குகள் எனக் கூறலாம்.

## பயிற்சி 7

1. பெருக்கல் அட்டவணையைப் பூர்த்தி செய்க.

| X | 2 | 3 | 4 | 5 | 10 |
|---|---|---|---|---|---|
| 1 | | | | | 10 |
| 2 | | 6 | | | |
| 3 | 6 | | | | |
| 4 | | | 16 | | |
| 5 | | | | | |
| 6 | | | | 30 | |
| 7 | | | | | |
| 8 | | | | | 80 |
| 9 | 18 | | | | |
| 10 | | | | | |

2. பெருக்கல் அட்டவணையைப் பூர்த்தி செய்க.

| X | 2 | 3 | 4 | 5 | 10 |
|---|---|---|---|---|---|
| 1 | | | | | |
| 2 | | | | | |
| 3 | | | | | |
| 4 | | | | | |
| 5 | | | | | |
| 6 | | | | | |
| 7 | | | | | |
| 8 | | | | | |
| 9 | | | | | |
| 10 | | | | | |

## பூச்சியத்தின் பெருக்கல் பலன்





மூன்று தொட்டிகளிலும் பூக்கள் இல்லை என்பதைக் கவனி.

இதனைப் பின்வருமாறு எழுதலாம்.

0 முதல் தொட்டியில் உள்ள பூக்கள் + 0 இரண்டாம் தொட்டியில் உள்ள பூக்கள் + 0 மூன்றாம் தொட்டியில் உள்ள பூக்கள் = 0 மொத்தப் பூக்கள்

0 + 0 + 0 = 0

3 X 0 = 0

அதாவது எந்த எண்ணுடன் பூச்சியத்தைப் பெருக்கினாலும் கிடைக்கும் பெருக்கல் பலன் பூச்சியமாகும்.

பூச்சியத்துடன் எந்த எண்ணைப் பெருக்கினாலும் கிடைக்கும் பெருக்கல் பலனும் பூச்சியமாகும் என்பதை அறிக.

3 X 0 = 0 X 3 = 0



## பெருக்கல் விவரங்களைச் சூழ்நிலைக்கேற்ப பயன்படுத்துதல்

**ஒரு யானைக்கு 4 கால்கள் எனில் 5 யானைகளுக்கு எத்தனை கால்கள் ?**

யானைகளின் எண்ணிக்கை = 5

ஒரு யானையின் கால்களின் எண்ணிக்கை = 4



4 ஆம் வாய்பாட்டை 5 X 4 வரை கூறு

| |
|---|
| 1 X 4 = 4 |
| 2 X 4 = 8 |
| 3 X 4 = 12 |
| 4 X 4 = 16 |
| 5 X 4 = 20 |



5 யானைகளின் மொத்த கால்கள் = 5 X 4 = 20

### எடுத்துக்காட்டு

மூன்றாம் வகுப்பு மாணவர்கள் வரிசைக்கு 5 பேராக 6 வரிசைகளில் அமர்ந்து இருக்கிறார்கள் எனில் அவ்வகுப்பில் உள்ள மொத்த மாணவர்கள் எத்தனை பேர்?

மொத்த வரிசைகள் = 6

ஒரு வரிசையில் உள்ள மாணவர்களின் எண்ணிக்கை = 5

வகுப்பில் உள்ள மொத்த மாணவர்களின் எண்ணிக்கை = 6 X 5

5 ஆம் வாய்பாட்டை 6 X 5 வரை கூறு

| |
|---|
| 1 X 5 = 5 |
| 2 X 5 = 10 |
| 3 X 5 = 15 |
| 4 X 5 = 20 |
| 5 X 5 = 25 |
| 6 X 5 = 30 |

வகுப்பில் உள்ள மொத்த மாணவர்கள் = 30 பேர்

# பயிற்சி 8

ஒரு பெட்டியில் 3 பென்சில்கள் உள்ளன. அதே மாதிரி உள்ள 6 பெட்டிகளில் மொத்தம் எத்தனை பென்சில்கள் இருக்கும் ?



பெட்டிகளின் எண்ணிக்கை =

பென்சில்களின் எண்ணிக்கை =

மொத்த பென்சில்களின் எண்ணிக்கை =

ஒரு வகுப்பில் ஒவ்வொரு மாணவரிடமும் 5 புத்தகங்கள் உள்ளன. எனில் 9 மாணவர்களிடம் உள்ள மொத்தப் புத்தகங்கள் எத்தனை ?



மாணவர்களின் எண்ணிக்கை =

புத்தகங்களின் எண்ணிக்கை =

புத்தகங்களின் மொத்த எண்ணிக்கை =

ராம் ஒவ்வொரு மாணவனுக்கும் 4 இனிப்புகள் வீதம் 10 மாணவர்களுக்கு கொடுத்தான் எனில் அவன் கொடுத்த இனிப்புகளின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு ?



மாணவர்களின் எண்ணிக்கை =

இனிப்புகளின் எண்ணிக்கை =

ராம் கொடுத்த மொத்த இனிப்புகளின் எண்ணிக்கை =

ஒரு பெட்டியில் 3 ஆப்பிள்கள் உள்ளன. எனில் 8 பெட்டிகளில் உள்ள ஆப்பிள்களின் எண்ணிக்கை எவ்வளவு ?



பெட்டிகளின் எண்ணிக்கை =

ஆப்பிள்களின் எண்ணிக்கை =

மொத்த ஆப்பிள்களின் எண்ணிக்கை =

ஒரு பெட்டியில் 5 வண்ணப் பென்சில்கள் உள்ளன எனில் 9 பெட்டிகளில் எத்தனை வண்ணப் பென்சில்கள் இருக்கும் ?



பெட்டிகளின் எண்ணிக்கை =

வண்ணப் பென்சில்களின் எண்ணிக்கை =

மொத்த வண்ணப் பென்சில்களின் எண்ணிக்கை =



## இரண்டு இலக்க எண்ணை ஓரிலக்க எண்ணால் பெருக்குதல்

12 ஐ 3 ஆல் பெருக்குக :

12 x 3 = ?

அதாவது 3 முறை 12



12 X 3 = 3 X 1 பத்து + 3 X 2 ஒன்றுகள்

= 3 X 10 + 3 X 2

= 30 + 6

= 36

12 X 3 = 36

பெருக்கல் வாய்பாட்டைப் பயன்படுத்தி பெருக்கல் :

படி 1 :

| ப | ஒ |
|---|---|
| 1 | 2 |
| | 6 |

X 3

முதலில் ஒன்றுகளைப் பெருக்குக
3 X 2 ஒன்றுகள் = 6 ஒன்றுகள்.

படி 2 :

| ப | ஒ |
| --- | --- |
| 1 | 2 |
| 3 | 6 |

3

பிறகு பத்துகளைப் பெருக்குக.
3 X 1 பத்து = 3 பத்துகள்.

12 X 3 = 36

**எடுத்துக்காட்டு**

| ப | ஒ |
| --- | --- |
| 3 | 2 |
| | 4 |

X 2

| ப | ஒ |
| --- | --- |
| 3 | 2 |
| 6 | 4 |

X 2

32 X 2 = 64

## பயிற்சி 9

**(1)** பெருக்கல் பலன் காண்க:

அ

| ப | ஒ |
| --- | --- |
| 2 | 3 |
| | ◯ |

X 3

| ப | ஒ |
| --- | --- |
| 2 | 3 |
| ◯ | |

X 3

23 X 3 = ◯



ஆ

| ப | ஒ |
| --- | --- |
| 4 | 3 |

X 2

| ப | ஒ |
| --- | --- |
| 4 | 3 |

X 2

43 X 2 =

இ

| ப | ஒ |
| --- | --- |
| 4 | 0 |

X 2

| ப | ஒ |
| --- | --- |
| 4 | 0 |

X 2

40 X 2 =

(2) பெருக்கல் வாய்பாட்டைப் பயன்படுத்தி பெருக்கல் பலன் காண்க :

அ 23 X 2

ஆ 20 X 4

இ 44 X 2

ஈ 32 X 3

உ 11 X 5

ஊ 22 X 4

14 ஐ 3 ஆல் பெருக்குக.

14 X 3 = ?

அதாவது 3 முறை 14



14 X 3 = 3 X 1 பத்து + 3 X 4 ஒன்றுகள்

(3 X 4 ஒன்றுகள் = 12 ஒன்றுகளை 1 பத்து + 2 ஒன்றுகள் என இனமாற்றம் செய்க)

= 3 பத்துகள் + 1 பத்து = 4 பத்துகள் + 2 ஒன்றுகள்

= 40 + 2

= 42

14 X 3 = 42

பெருக்கல் வாய்பாட்டைப் பயன்படுத்தி பெருக்கல் பலனைக் காண்போம்:

பெருக்கல் பலனைக் காண் 14 X 3.

படி 1 :




- 4 ஒன்றுகளை 3 ஆல் பெருக்குக
  3 X 4 ஒன்றுகள் = 12 ஒன்றுகள்.
- 12 ஒன்றுகள் = 1 பத்து + 2 ஒன்றுகள்.
- 2 ஒன்றுகளை ஒன்றுகள் இடத்தில் எழுதவும்.
- 1 பத்தை பத்துகள் இடத்திற்கு எடுத்துச் செல்லவும்.



படி 2 :




- 1 பத்தை 3 ஆல் பெருக்குக.
  3 X 1 பத்து = 3 பத்துகள்
- இனமாற்றத்தால் கிடைத்த 1 பத்துடன் கூட்டுக.
  3 பத்துகள் + 1 பத்து = 4 பத்துகள்
- 4 பத்தை பத்துகள் இடத்தில் எழுதுக.

14 X 3 = 42

## எடுத்துக்காட்டு

பெருக்குக 23 X 5

படி 1 :




- 3 ஒன்றுகளை 5 ஆல் பெருக்குக
  5 X 3 ஒன்றுகள் = 15 ஒன்றுகள்.
- 15 ஒன்றுகள் = 1 பத்து + 5 ஒன்றுகள்.
- 5 ஒன்றுகளை ஒன்றுகள் இடத்தில் எழுதுக.
- 1 பத்தை பத்துகள் இடத்திற்கு எடுத்துச் செல்க.

படி 2 :




- 2 பத்துகளை 5 ஆல் பெருக்குக.
- இனமாற்றத்தால் கிடைத்த 1 பத்துடன் கூட்டுக.
- 10 பத்துகள் + 1 பத்து = 11பத்துகள்
  11 பத்துகள் = 1 நூறு + 1 பத்து.
- 1 பத்தை பத்துகள் இடத்திலும் 1 நூறை நூறுகள் இடத்திலும் எழுதுக.

படி 3 :

| 1 | 1 | |
|---|---|---|
| நூ | ப | ஒ |
| | 2 | 3 |
| 1 | 1 | 5 |

X 5

23 X 5 = 115

## பயிற்சி 10

1) பெருக்கல் பலன் காண்க :

| | | |
|---|---|---|
| அ 32 X 4 | இ 42 X 2 | உ 61 X 5 |
| ஆ 23 X 3 | ஈ 20 X 2 | ஊ 21 X 5 |

2) பெருக்கல் பலன் காண்க :

| | | |
|---|---|---|
| அ 14 X 3 | இ 23 X 4 | உ 62 X 5 |
| ஆ 48 X 2 | ஈ 24 X 5 | ஊ 26 X 3 |






**1. குச்சிகளைக் கொண்டு பெருக்கல் வாய்பாடுகளை அமைப்போம்.**

3 ஆம் பெருக்கல் வாய்பாடுஅமைப்போம்.

| |
|---|
| 1 X 3 = 3 |
| 2 X 3 = 6 |
| 3 X 3 = 9 |
| 4 X 3 = 12 |
| 5 X 3 = 15 |
| 6 X 3 = 18 |
| 7 X 3 = 21 |
| 8 X 3 = 24 |
| 9 X 3 = 27 |
| 10 X 3 = 30 |

- 3 குச்சிகளைச் செங்குத்தாக வைக்கவும்.
- 1 குச்சியை மேலே கண்டபடி குறுக்காக வைக்கவும்.
- குச்சிகள் சந்திக்கும் புள்ளிகளை எண்ணுக.
- அவை மொத்தம் 3 புள்ளிகளில் சந்திக்கின்றன.
- 1 முறை 3 = 3 அல்லது 1 X 3 = 3.
- மேலும் 1 குச்சியை மேலே கண்டபடி குறுக்காக வைக்கவும்.
- அவை சந்திக்கும் மொத்த புள்ளிகள் 6.
- 2 முறை 3 = 6 அல்லது 2 X 3 = 6.
- இதே முறையைத் தொடர்ந்து 3 முறை, 4 முறை என 10 முறை வைத்து பெருக்கல் பலன் காணவும்.

**2. அடுத்தடுத்த இரு எண்களின் பெருக்கல் பலன் 12 ஆக வரும் கட்டங்களை வண்ணம் தீட்டுக.**

| | | | | |
|---|---|---|---|---|
| 6 | 2 | 8 | 3 | 4 |
| 2 | 7 | 1 | 6 | 3 |
| 4 | 3 | 12 | 4 | 3 |
| 4 | 9 | 1 | 8 | 1 |
| 3 | 4 | 7 | 1 | 12 |

**3. விளையாட்டு முறையில் பெருக்கல் வாய்பாடு அமைத்தல்.**

**4** ஆம் பெருக்கல் வாய்பாடு.

படி 1 :

வரிசைக்கு **4** வட்டங்களாக **10** வரிசைகள் வரைக.

படி 2 :

வட்டங்களில் **1** முதல் **40** வரை எழுதுக

படி 3 :

கடைசி செங்குத்து வரிசையில் உள்ள எண்கள் பெருக்கல் பலன் ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| 5 | 6 | 7 | 8 |
| 9 | 10 | 11 | 12 |
| 13 | 14 | 15 | 16 |
| 17 | 18 | 19 | 20 |
| 21 | 22 | 23 | 24 |
| 25 | 26 | 27 | 28 |
| 29 | 30 | 31 | 32 |
| 33 | 34 | 35 | 36 |
| 37 | 38 | 39 | 40 |



மற்ற வாய்பாடுகளையும் அமைத்து மகிழ்க.



## மனக்கணக்கு

ராமுவின் வயது 30. அவன் தந்தை வயது ராமுவின் வயதைப் போல் இரண்டு மடங்கு எனில் அவன் தந்தை வயது என்ன ?

கீதா முதல் தேர்வில் 45 மதிப்பெண்கள் பெற்றாள். அவள் அடுத்த தேர்வில் அதனைப் போல் இரண்டு மடங்கு மதிப்பெண் பெற்றாள் எனில் இரண்டாவது தேர்வில் அவள் பெற்ற மதிப்பெண்கள் எவ்வளவு ?

சஞ்சீவி முதல் ஆட்டத்தில் 48 ஓட்டங்கள் பெற்றான். இரண்டாம் ஆட்டத்தில் அதனைப் போல் இரு மடங்கு ஓட்டங்கள் எடுத்தான் எனில் அவன் இரண்டாம் ஆட்டத்தில் பெற்ற ஓட்டங்கள் எத்தனை ?

சீதாவின் எடை 16 கிலோ. அவள் சகோதரன் கிருட்டிணனின் எடை அவளது எடையைப் போல் இரு மடங்கு எனில் கிருட்டிணனின் எடை எவ்வளவு ?

ரேவதி 12 வாழைப்பழங்கள் வாங்கினாள். சரோ அதைப்போல் இரண்டு மடங்கிற்கு 4 குறைவாக வாங்கினாள் எனில் சரோ வாங்கிய வாழைப்பழங்களின் எண்ணிக்கை எவ்வளவு ?

# 7 வகுத்தல்

ராமுவிடம் 6 ஆப்பிள்கள் உள்ளன. அவன் அவற்றை 2 குழந்தைகளுக்குச் சமமாகப் பிரித்துக் கொடுக்க விரும்புகிறான்.



எப்படி சமமாகப் பிரிப்பது ?







முதல் முறையாக
ஒவ்வொருவருக்கும் ஓர்
ஆப்பிளைக் கொடுக்க வேண்டும்.

மீதி 4 ஆப்பிள்கள் இருக்கும்.







அடுத்த முறையும்
ஒவ்வொருவருக்கும் ஓர்
ஆப்பிளைக் கொடுக்க வேண்டும்.

மீதி 2 ஆப்பிள்கள் இருக்கும்.







கடைசி முறையாக
ஒவ்வொருவருக்கும் ஓர்
ஆப்பிளைக் கொடுக்க வேண்டும்.

ஆப்பிள்கள் மீதம் ஏதும் இல்லை.





ஒவ்வொரு குழந்தைக்கும்
3 ஆப்பிள்கள் கிடைத்துள்ளன.

சமப் பங்கீடு என்பதே
“வகுத்தல்” எனப்படும்.



இவ்வாறாக ராம் **6** ஆப்பிள்களை **2** குழந்தைகளுக்கு ஒவ்வொருவருக்கும் **3** ஆப்பிள்கள் வீதம் சமமாகப் பிரித்துக் கொடுத்தான்.

| | | |
|---|---|---|
| மொத்த ஆப்பிள்களின் எண்ணிக்கை | = | 6 |
| நபர்களின் எண்ணிக்கை | = | 2 |
| ஒவ்வொருவருக்கும் கிடைத்த ஆப்பிள்களின் எண்ணிக்கை | = | 3 |

இதனை $6 \div 2 = 3$ என எழுதுகிறோம்.

இதை, **6** ஐ **2** ஆல் வகுக்கக் கிடைப்பது **3** எனப் படிக்கலாம்.

$6 \div 2 = 3$ என்பது வகுத்தல் விவரம்.

$\div$ குறியீடு வகுத்தல் செயலைக் குறிக்கிறது.

**6** ஆப்பிள்களை ஒவ்வொரு தொகுப்பிலும் **2** ஆப்பிள்கள் உள்ளவாறு சம தொகுப்புகளாகப் பிரிக்க வித்யாவிற்கு உதவுங்கள்.





**6** ஆப்பிள்களை ஒவ்வொரு தொகுப்பிலும் **2** ஆப்பிள்கள் உள்ளவாறு **3** தொகுப்புகளாகப் பிரிக்கலாம்.



இதன் வகுத்தல் விவரம் என்ன ?



வகுத்தல் விவரம்
$6 \div 2 = 3$

எடுத்துக்காட்டில் உள்ளது போல் வகுத்தல் விவரங்களைப் பூர்த்தி செய்க.

**எடுத்துக்காட்டு**

8 ÷ 4 = ?



வகுத்தல் விவரம் 8 ÷ 4 = 2

**பயிற்சி 1**

அ) 4 ÷ 2 =



இ) 9 ÷ 3 =



ஆ) 12 ÷ 4 =



ஈ) 10 ÷ 5 =





## வகுத்தல் என்பது தொடர் கழித்தல்

வகுத்தல் என்பது சமப்பங்கீடு மட்டுமல்ல தொடர் கழித்தலும் ஆகும்.

**6** பொம்மைகளை **2** மேசைகளில் சமமாகப் பின்வருமாறு வைப்போம்.

முதல் முறை ஒவ்வொரு மேசையிலும் ஒவ்வொரு பொம்மை வைக்கலாம்.





மீதம் உள்ள பொம்மைகள் $6 - 2 = 4$

இரண்டாம் முறை மீண்டும் ஒவ்வொரு மேசையிலும் ஒவ்வொரு பொம்மை வைக்கலாம்.





மீதம் உள்ள பொம்மைகள் $4 - 2 = 2$

மூன்றாம் முறை ஒவ்வொரு மேசையிலும் ஒவ்வொரு பொம்மை வைக்கலாம்.





மீதம் உள்ள பொம்மைகள் $2 - 2 = 0$

**6** லிருந்து **2** ஐத் தொடர்ந்து **3** முறை கழிக்க பூச்சியம் கிடைக்கிறது.

இதை $6 \div 2 = 3$ என்கிறோம்.

**எனவே வகுத்தல் என்பது தொடர் கழித்தல் ஆகும்.**

## தொடர் கழித்தல் மூலம் வகுத்தல் :

**எடுத்துக்காட்டு**

15 ÷ 3

15 லிருந்து **3** ஐத் தொடர்ந்து கழிப்போம்.

```
  1 5
–   3  ⟶ முதல் முறை
  ———
  1 2
–   3  ⟶ 2ம் முறை
  ———
    9
–   3  ⟶ 3 ம் முறை
  ———
    6
–   3  ⟶ 4 ம் முறை
  ———
    3
–   3  ⟶ 5 ம் முறை
  ———
    0
  ———
```

**15** லிருந்து **3** ஐ **5** முறை தொடர்ந்து கழித்திருக்கிறோம். (மீதி பூச்சியம் வரும் வரை)

எனவே $15 \div 3 = 5$




தொடர் கழித்தல் முறையில் வகுக்க.

அ. $15 \div 5$

$15 \div 5 =$

ஆ. $12 \div 4$

$12 \div 4 =$



## பெருக்கலுக்கும் வகுத்தலுக்கும் உள்ள தொடர்பு

சில பந்துகள் கீழ்க்கண்டவாறு வரிசைப்படுத்தப்பட்டுள்ளது :

| பெருக்கல் | வகுத்தல் - 1 | வகுத்தல் - 2 |
|---|---|---|
| | | |
| மொத்தப் பந்துகள் 4 X 3 = 12 | 12 ÷ 3 = 4 | 12 ÷ 4 = 3 |

மேலேயுள்ள அட்டவணையிலிருந்து ஒவ்வொரு பெருக்கல் விவரத்திற்கும் இரண்டு வகுத்தல் விவரங்கள் உள்ளது என அறியலாம்.






குறிப்பு

ஒரு எண் பூச்சியத்தால் பெருக்கப்பட்டால், அதற்கு ஒரே ஒரு வகுத்தல் விவரந்தான் உண்டு.

**எடுத்துக்காட்டு**

| பெருக்கல் விவரம் | | வகுத்தல் விவரம் |
|---|---|---|
| 5 X 0 = 0 |  | 0 ÷ 5 = 0 |



பூச்சியம் ÷ பூச்சியமல்லாத எண் = பூச்சியம்

## பயிற்சி 3

**பின்வரும் பெருக்கல் விவரங்களுக்கு வகுத்தல் விவரங்கள் எழுதுக:**

| பெருக்கல் விவரம் | வகுத்தல் விவரங்கள் | |
|---|---|---|
| 3 X 2 = 6 | 6 ÷ 3 = 2 | 6 ÷ 2 = 3 |
| 4 X 3 = 12 | | |
| 7 X 2 = | | |
| 6 X 5 = | | |
| 3 X 3 = | | |
| 5 X 4 = | | |
| 2 X 0 = | | |
| 4 X 4 = | | |
| 9 X 0 = | | |
| 8 X 5 = | | |



## வகுத்தல் வாய்பாடு

2, 3, 4, 5 மற்றும் 10 ஆம் பெருக்கல் வாய்பாடுகளைக் கொண்டு நாம் வகுத்தல் விவரங்களை உருவாக்கலாம்.

**2 ஆம் வாய்பாட்டிற்கான வகுத்தல் விவரங்களை அமைப்போம்.**

| பெருக்கல் வாய்பாடு (2) | வகுத்தல் விவரங்கள் | |
|---|---|---|
| 1 X 2 = 2 | 2 ÷ 2 = 1 | 2 ÷ 1 = 2 |
| 2 X 2 = 4 | 4 ÷ 2 = 2 | 4 ÷ 2 = 2 |
| 3 X 2 = 6 | 6 ÷ 2 = 3 | 6 ÷ 3 = 2 |
| 4 X 2 = 8 | 8 ÷ 2 = 4 | 8 ÷ 4 = 2 |
| 5 X 2 = 10 | 10 ÷ 2 = 5 | 10 ÷ 5 = 2 |
| 6 X 2 = 12 | 12 ÷ 2 = 6 | 12 ÷ 6 = 2 |
| 7 X 2 = 14 | 14 ÷ 2 = 7 | 14 ÷ 7 = 2 |
| 8 X 2 = 16 | 16 ÷ 2 = 8 | 16 ÷ 8 = 2 |
| 9 X 2 = 18 | 18 ÷ 2 = 9 | 18 ÷ 9 = 2 |
| 10 X 2 = 20 | 20 ÷ 2 = 10 | 20 ÷ 10 = 2 |




3, 4, 5 மற்றும் 10 ஆம் வாய்பாடுகளுக்கு வகுத்தல் விவரங்களை அமைக்க.

## எளிய வகுத்தல் கணக்குகள்

(அ) தொகுப்பு முறையில் வகுத்தல் :

**எடுத்துக்காட்டு**

24 நட்சத்திரங்களை 4 நட்சத்திரங்கள் கொண்ட தொகுப்புகளாக சமப்பங்கிடவும்.

4 நட்சத்திரங்கள் கொண்ட தொகுப்புகளாக அமைக்க.

24 நட்சத்திரங்கள் ஒவ்வொரு தொகுப்பிலும் 4 வீதம் 6 தொகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.



24 ÷ 4 = 6

# பயிற்சி 4

1) 12 புத்தகங்களை 3 புத்தகங்கள் கொண்ட தொகுப்புகளாக்குக.




$12 \div 3 =$ ☐

2) 15 மெழுகுவத்திகளை 5 மெழுகுவத்திகள் கொண்ட தொகுப்புகளாக்குக.



$15 \div 5 =$ ☐

3) 16 பூக்களை 2 பூக்கள் கொண்ட தொகுப்புகளாக்குக.



$16 \div 2 =$ ☐

4) 12 பகடைகளை 4 சமத் தொகுப்புகளாக்குக.



$12 \div 4 =$ ☐

5) 20 சாவிகளை 2 சமத் தொகுப்புகளாக்குக.



$20 \div 2 =$ ☐



(ஆ) பெருக்கல் வாய்பாட்டைப் பயன்படுத்தி வகுத்தல் :

**எடுத்துக்காட்டு 1**

வகுக்க 15 ÷ 3

1 X 3 = 3
2 X 3 = 6
3 X 3 = 9
4 X 3 = 12
5 X 3 = 15

3 ஆம் வாய்பாட்டைப் பெருக்கல் பலன் 15 வரும் வரை கூறு.

15 ÷ 3 = 5

**எடுத்துக்காட்டு 2**

வகுக்க 30 ÷ 5

1 X 5 = 5
2 X 5 = 10
3 X 5 = 15
4 X 5 = 20
5 X 5 = 25
6 X 5 = 30

5 ஆம் வாய்பாட்டைப் பெருக்கல் பலன் 30 வரும் வரை கூறு.

30 ÷ 5 = 6

## பயிற்சி 5

வகுக்க :

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 12 ÷ 3 = | | 4 | 28 ÷ 4 = | | 7 | 35 ÷ 5 = | |
| 2 | 18 ÷ 2 = | | 5 | 10 ÷ 5 = | | 8 | 27 ÷ 3 = | |
| 3 | 20 ÷ 10 = | | 6 | 16 ÷ 4 = | | 9 | 25 ÷ 5 = | |

# 8 நீட்டல் அளவை

## நினைவு கூர்வோம்

பொருள்கள் எவ்வளவு நீளமானது என்பதைக் கண்டறிய நாம் கீழ்க்கண்ட தரப்படுத்தப்படாத அலகுகளைக் கொண்டு அளந்தறிகிறோம்.


சாண்


முழம்


தப்படி


காலடி

இதைப் போன்று பொருள்களின் நீளத்தை எளிய பொருள்களைக் கொண்டும் அளந்தறியலாம்.





## செயல்பாடு 1

1. வகுப்பில் உள்ள மேசையின் நீளம் .................. முழங்கள்.

2. உன்னுடைய வகுப்பறையின் நீளம் .................. தப்படிகள்.

3. கணிதப் புத்தகத்தின் நீளம் .................. சாண்.

4. வகுப்பறையின் அகலம் .................. காலடிகள்.

## தரப்படுத்தப்பட்ட அலகுகளின் அவசியம்



## செயல்பாடு 2

ஒரு கயிற்றின் நீளத்தை 'சாண்' மூலம் மாணவர்களை அளக்கச் செய்து அட்டவணைப் படுத்துக.

| வ. எண் | மாணவர்களின் பெயர் | கயிற்றின் நீளம் (சாண்) |
|---|---|---|
| | | |

மேற்கண்ட அளவுகளைக் கவனி. அனைத்து அளவுகளும் சமமாக உள்ளனவா ?

சமமாக இல்லை.

ஏனென்றால் ஒவ்வொரு மாணவனின் சாண் அளவும் வெவ்வேறானவை.எனவேதான் பொருள்களின் நீளத்தை அளந்தறிய நமக்குத் தரப்படுத்தப்பட்ட அளவுகள் தேவைப்படுகிறது.

நீளங்களை அளப்பதற்கு மீட்டர் அல்லது சென்டிமீட்டர் போன்ற தரப்படுத்தப்பட்ட அலகுகளைப் பயன்படுத்துகிறோம்.

## தரப்படுத்தப்பட்ட அலகுகளைப் பயன்படுத்துதல்.

### மில்லிமீட்டர்

மில்லிமீட்டர் என்பது நீளங்களை அளக்கப்பயன்படும் மிகச்சிறிய அலகு. மிகச்சிறிய பொருள்களின் அளவுகளை அளப்பதற்கு இது பயன்படுகிறது. உன் அளவுகோலை உற்றுப்பார். அதில் இரு எண்களுக்கிடையே சிறு சிறு கோடுகள் உள்ளதைக் காணலாம். இவை குறிக்கும் அளவுகள் மில்லிமீட்டர் எனப்படும். இதனை மி.மீ. என எழுதுகிறோம்.




### சென்டிமீட்டர்

படத்தைப் பார்:




நினைவில் கொள்
10 ஒன்றுகள் = 1 பத்து

புத்தகத்தின் தடிமன் 10 மி.மீ. இதை ஒரு சென்டிமீட்டர் என்கிறோம். சென்டிமீட்டர் என்பது மில்லிமீட்டருக்கு அடுத்தப்படியான பெரிய அலகாகும்.



இதை செ.மீ. என்று எழுதலாம்.

**10 மி.மீ. = 1 செ.மீ.**



## மீட்டர்



படத்தைப் பார்:

கடைக்காரர் துணிகளை அளப்பதற்கு மீட்டர் அளவுகோலைப் பயன்படுத்துகிறார். இதன் நீளம் 100 செ.மீ. ஆகும்.

மீட்டர் என்பது சென்டிமீட்டருக்கு அடுத்து பயன்பாட்டில் உள்ள பெரிய அலகாகும். இதை 'மீ' என்று எழுதலாம்.

**100 செ.மீ. = 1மீ**

## கிலோமீட்டர்




படத்தைப் பார் :

பேருந்து எவ்வளவு தூரம் கடக்கிறது என்பதைக் கிலோமீட்டரில் குறிப்பிடுகிறோம்.

1 கிலோ மீட்டர் என்பது 1000 மீ ஆகும். நீட்டளலவையில் கிலோமீட்டர் என்பது மிகப்பெரிய அலகு.

இதை ஒரு கி.மீ. என்று எழுதலாம். இது நீண்ட தூரத்தைக் கணக்கிட பயன்படுகிறது.

**1000 மீ = 1 கி.மீ.**

## அளவுகோலைப் பயன்படுத்துதல்



சென்டிமீட்டர் அளவுகோலில் பூச்சியம் எண்ணிற்கு நேராக நீளத்தை அளக்க வேண்டிய பொருளின் ஒரு முனையை வைக்கவும். அளவு கோலில் பொருளின் மறுமுனை காட்டும் அளவு அப்பொருளின் நீளத்தைக் குறிக்கும்.




◀ பென்சிலின் நீளம் **14** செ.மீ.

பேனாவின் நீளம் 12 செ.மீ. ▶







◀ அழிப்பானின் நீளம் 4 செ.மீ.



### செயல்பாடு 3

பென்சில்பெட்டி, துடைப்பான், கணிதப் புத்தகம், வண்ணமெழுகுப் பென்சில் ஆகிய பொருள்களின் நீளத்தை செ.மீ. அளவுகோலால் அளந்து அட்டவணைப்படுத்துக.





## செயல்பாடு 4

வகுப்பில் உள்ள மாணவர்களின் உயரங்களை சென்டிமீட்டரில் அளந்து அட்டவணைப்படுத்துக.

| வ. எண் | மாணவர்களின் பெயர் | மாணவர்களின் உயரம் ( செ.மீ. ) |
|---|---|---|
| | | |

## செயல்பாடு 5

கொடுக்கப்பட்ட பொருள்களின் நீளத்தை தோராயமாக அளந்து பின்பு தரப்படுத்தப்பட்ட அளவு கொண்டு அளந்து சரிபார்.

| வ. எண் | பொருள்களின் பெயர் | தோராய அளவு | துல்லியமான அளவு |
|---|---|---|---|
| 1. | சுண்ணக்கட்டி | | |
| 2. | துடைப்பான் | | |
| 3. | பென்சில் பெட்டி | | |
| 4. | மேசை | | |
| 5. | இருக்கை | | |
| 6. | கரும்பலகை | | |



## செயல் திட்டம்

உன் சுற்றுப்புறத்தில் உள்ள ஏதேனும் **5** பொருள்களின் நீளத்தை தோராய மற்றும் தரப்படுத்தப்பட்ட துல்லிய அளவுகள் மூலம் அளந்து அட்டவணைப்படுத்துக.

9

# எடை

## நினைவுகூர்வோம்


சுண்ணக்கட்டிகள்


கைக்குட்டை


எழுதுகோல்பெட்டி


துடைப்பான்



புத்தகம்

படங்களைப் பார்த்து பொருள்களின் எடையின் அடிப்படையில் இறங்கு வரிசையில் எழுதுக.

1 

2 

3 

4 

5 

மேற்கண்ட செயல்பாடுகளிலிருந்து என்ன அறிகிறாய்?

ஒவ்வொரு பொருளுக்கும் அதற்கான எடை உண்டல்லவா!



எந்தப் புத்தகப்பை கனமானது என யூகிக்க முடியுமா ?



## பயிற்சி 1

எடை அதிமான பொருள்களை ஒவ்வொரு தொகுப்பிலும் வட்டமிடுக.

1

2

3

4

முயற்சிசெய்



## எளிய தராசு



மெல்லியகுச்சி, நூல், தட்டுகள் இவற்றினைப் பயன்படுத்தி படத்தில் காட்டியுள்ளபடி எளிய தராசு ஒன்றைத் தயாரித்துக் கொள்.

## தரப்படுத்தப்படாத அளவுகளைக் கொண்டு பொருட்களின் எடை அறிதல்

எளிய தராசினைப் பயன்படுத்தி பொருள்களின் எடைகளைத் தரப்படுத்தப்படாத அளவுகளால் அளப்போம்.

### எடுத்துக்காட்டு

1



ஒரு தர்பூசணியின் எடை

= 3 தேங்காய்கள்.

2



ஒரு பெட்டியின் எடை

= 4 பேனாக்கள்.



## பயிற்சி 2

கீழ்க்கண்ட படங்களிலிருந்து பொருள்களின் எடையைக் கண்டுபிடி.

1



ஒரு கோழிக்குஞ்சின் எடை

= ________ முட்டைகள்.

2



ஒரு பப்பாளிப்பழத்தின் எடை

= ________ ஆப்பிள்கள்.

3



ஒரு அன்னாசிப்பழத்தின் எடை

= ________ பொம்மைகள்.




பொருள்களின் எடையை உனது சூழ்நிலையில் கிடைக்கும் தரப்படுத்தப்படாத அளவுகளான விதைகள், கற்கள் மற்றும் கோலிகள் போன்றவற்றைக் கொண்டு எளிய தராசின் மூலம் அளந்து அட்டவணைப்படுத்துக.

